உ

பராசத்தி துணை

உயிர் மெய் எழுத்து

# மூலிகை ஜாலரத்தினம்

## மூலமும் - உரையும்

[இரண்டு பாகங்கள் அடங்கியது]

இ ஃ து

பீதாம்பர ஐயர் மரபில் வந்த
ஜாலரத்தின சிரோமணி அவர்களிட மிருந்து
பண்டைய ஏட்டுப் பிரதியைக்கொண்டு,
கொரக்கோட்டை
ப. வடிவேலு செட்டியார் அவர்களால்
எழுதியது.

பதிப்பாளர் :

**B. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ்,**

சென்னை — 1.



[ரூ. 1—25

உ

பராசக்தி துணை

# உயிர் மெய் எழுத்து
# மூலிகை ஜாலரத்தினம்

மூலமும் - உரையும்

## முதல் பாகம்

## 1. மனோவசியம்




விருத்தம்

வல்லதொரு பிரணவத்தின் வன்மையாலே
வாழலா முலகில்பல கற்ப காலம்
கல்லுமலே கரடெலாம் பொன்ன தாச்சு
கண்பட்ட விடமெலாம் கைலை யாச்சு

நல்வினைத் தீவினைக் கவிழ்த மாச்சு
நாடின பெரியோர்க்கு நாட்ட மாச்சு
புல்லறிவோர் தங்களுக்குப் பேய்தா ஞச்சு
பூரணத்தை யறிந்தவர்க்கு ஞானமாச்சே.

வசனம்:—உலகின் கண் சர்வ வசியம் செய்ய வேண்டு மாயின் முதலில் மனேவசியம் செய்துக் கொள்ள வேண்டும். அவ்வசியம் முதலில் சித்தி பெருவிடில் மற்ற எவ்வித வசியமும் சித்தி பெருது. இதுபற்றியே மூத்தோர்கள் ;

ஞானியென்ருல் நிலையைக்கேள்
யோகியென்ருல் வாசியைக்கேள்
வாதியென்ருல் வழலையைக்கேள்
வைத்தியனென்ருல் கட்டைக்கேள்.

என்றனர்கள்.

இதுவே சரியை - கிரியை - யோகம் - ஞானம்.
இதுவே சாலோக - சாருப - சாமீப - சாயுஜ்ஜியம்.

இவ்வித மனேவசியத்தை அடைவதற்கு முதலில் சிற் சில விதிவிலக்குகள் அறிந்து ஒழுக வேண்டும். அதாவது, ஏகாக்கிரகமான ஒரு தனி அறை இருக்கவேண்டும். அது சுமார் எட்டடிக்கு எட்டடி அல்லது பத்தடிக்குப் பத்தடி சதுரம் இருக்க வேண்டும்.

அந்த ஏகாக் கிரகம் சுத்தமான வெண்மை சுண் ணும்பு பூசி இருக்கவேண்டும். அங்கு இதர மனுஷாள் யாரும் பிரவேசிக்காம லிருக்கவேண்டும். அதில் வாசனை திரவியங்கள் நிரம்பி இருக்கவேண்டும். அங்கே இருபக்க மும் பின்புறமும் மூன்று பிரகாசமான விளக்குகள் எரிய வேண்டும்.



மேற்படி யோக நிலையில் உட்காருபவர் எதிர் சுவரில் சுமார் மூன்றடி உயரமாக தன் நெற்றிக்கு நேராக மேல் காட்டிய கரும்புள்ளி சக்கரம் மாட்டிவிட வேண்டும்

நிசப்தமாகிய இரவில் சுமார் மூன்று மணிக்கு எழுந்து மல ஜலம் கழித்துவிட்டு தந்த சுத்தி செய்துக்கொண்டு சுத்த ஜலத்தில் ஸ்நானம் செய்துவிட்டு மேலே யீர மில்லாமல் சுத்த வஸ்திரத்தினல்-துடைத்துக்கொண்டு, கரும்புள்ளி பலகைக்கு எதிரிலே பனிரெண்டடி தூரமாக பத்மாசனமாவது சித்தாசனமாவது போட்டு உட்கார்ந்துக் கொண்டு, வேறு சிந்தனை யாதும் நினையாமல், இரு விழிகளையுந் திறந்துக்கொண்டு, இருவிழி பார்வையையும் புருவ மத்தியில் நோக்கமிட்டு கண்ணை இமைக்காமல்

முதலில் சொல்லிய சக்கரப்படியே அகார உகார மகார மாகிய ஓங்கார பிரணவத்தை உதடு அசையாமல் மனதி லேயே உச்சரித்துக் கொண்டு, கரும்புள்ளி பலகை சக்க ரத்தை ஒரு மணி நேரம் நான்குமணி வரையில் பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும். இவ்வாறு சுமார் மூன்று மாதம் செய்துக்கொண்டு வந்தால் நாளுக்கு நாள் மனது குவிந்து, மேற்படி கரும்புள்ளி மறைந்து ஒரு ரகசியம் தோன்றும்.

இதனையே தமிழில் யோகமென்றும், ஆங்கிலத்தில் மெஸ்மரிசம், ஹிப்னுடிசம், மாக்னிடஸம் என்று சொல்லு வர். இதுவே பிர்மா விஷ்ணு, ருத்திரனுகும், இதையே சித்தர் முனிவர்களெல்லாம் யோகமென்றும், ஞானமென் றும் சொல்லுவர். இதற்குரிய ரேசக பூரக கும்பகத்தை பின்னே வேறிடத்தில் சொல்லுவாம். நிற்க, இதனை,



# மூலிகை ஜாலரத்தினம்

## விருத்தம்

உச்சியில் மகார மாகில்
உயர்நடு சிகாரமாகில்
பிச்சத்தில் நகார மாகில்
பிறைவட்டம் சூலம் போட்டு
மிச்சத்தில் சித்தரெல்லாம்
வினைகளைத் தீர்க்கவேண்டி
பட்சத்தில் பகர்ந்து பார்த்தால்
பகர்ந்திடும் அட்சரங்கள் தானே.

உரை:—இதன் கருத்தாவது, பிறைவட்டமென்பது நமது சிரசேயாம். இன்னும் "எண்ஜாணுடலுக்கு சிரசே, பிரதானம் பஞ்சேந்திரியங்களில் கண்ணே பிரதானம்;! என்பதும் இது மர்மத்தைக் கொண்டேயாம். அதில் ம-சி-ந என்பது முதல் மகாரம்; கடைசியில் நகாரம்; நடுவில் சிகாரம் இம்மூன்றும் சேர்ந்தது ''மநசி'' இதுவே "மனமது செம்மையானல் மந்திரம் ஜெபிக்கவேண்டாம்'' என்றனர். இவ்வித இரகசியத்தை முன்னிட்டே,

" தோராத வட்டம் முக்கோண சட்கோண
துலங்கு வட்டத்து
ஈராறு இதழிட்டு றீங்கார முள்ளிட்டு
இத னடுவே
ஆராதனை செய்து அர்ச்சித்துப் பூசித்து
அடிபணிந் தால்
வாராதீரா ளல்லவே வாலை ஞான
வராகி யுமே.''

" கையறவிலா நுடுக் கண்புருவப்பூட்டு
கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு
ஐயர்மிக உய்யும்வகை யப்பர்விளை யாட்டு
ஆடுவதென் றேமறைகள் பாடுவதும் பாட்டு''

"உருத்தரித்த நாடியிலொடுங்குகின்ற வாயுவை
கருத்தினு லிறுத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தர்களும் பாலராவர் மேனியும் சிவக்குமே
அருட்டரித்தநாதராணை யம்மையாணை யுண்மையே"

என்னும், ஒரு கருத்தை பலரும் பலவாருகக் கூறியுள்ளார்கள்.

இப்படிப்பட்ட மனம் குவிந்து பிரம்ம ரகசியத்தைக் கண்டவர்க்கே முதலில் சொல்லியது போல சகலமும் சித்தியாகும். ஆனதால் அதிலொரு உலக சித்தாகிய மூலிகையினுலே சுழிமுனை கொண்டு பலரும் பிரமிக்கும்படி ஜாலங்களை ஒருவாறு எடுத்துரைப்பாம்.

---

## 2. ஜாலத்திற்கு அதிதேவதை



சிவன் கோயிலில் வில்வமரத்தில் இருக்கும் புல்லுருவிக்குப் பின் சொல்லப் போவதுபோல சாபவிமோசனஞ் செய்து. அதற்கு உயிர்கொடுத்து, அதைக்கொண்டுவந்து, இந்த சக்கரத்தை தாம்பரம் அல்லது வெள்ளி பொன் முதலிய தகட்டில் பதித்து, அதற்கு அபிஷேகம் கந்தபுஷ்பம் சாத்தி, மேற்படி புல்லுருவியையும் அதோடு வைத்து, ஆதியில் சொல்லிய சுழிமுனையில் மனதை நிறுத்தி கீழ் சொல்லிய மூலமந்திரத்தை 1008-தரம் ஜெபிக்க வேண்டும். இப்படி 48-நாள் செய்ய சித்தியாகும். அப்பால் ஷை புல்லுருவியை குழைத்து திலர்தமிட ஜெகவசியம் தேவ வசியம் முதலிய பலமும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் கைவல்யமாகும்.

*மூலமந்திரம்*

ஓம் ஹரும் ஹ்றீம் ஹ்ூறூம் கங்கணபதே
வரவர சர்வஜனமே சர்வஜனமே வசமாக சுவாஹா

---

## 3. ஜாலத்திற்கு மஞ்சட்பாவை

மஞ்சட் கிழங்கில் பெண் உருவம் செய்து சித்திரமூலக் கொடியை அதன்பேரில் சுற்றி, பரிமளவர்க்கம் தூப தீபங் கொடுத்து, ஜாகினி, டாகினி, ஜாலக்காள் தேரு நீ ரா ரா ரா, நான் நினைக்கும்போதெல்லாம் என்னுடனிருந்து; இட்டபடி உலகம் மயக்க ஜாலத்தை விளையாடக் கடவது சுவாகா என்று இலக்ஷம் உருகொடுக்க வசியமாகி சதா உன்னுடன் விளையாடிக் கொண்டிருப்பாள்.

---

## 4. ஜாலத்திற்கு மை

கால் கழஞ்சு சங்கு பாஷாணத்தில் 10-குன்றியிடை பாதரசத்தைச் சேர்த்து, ஊர்க்குருவி வாயினுள் செலுத்தி அபானவாய் முதலியவைகளைத் தைத்து, ஓர் குடுவையில் போட்டு ஒருபடி கள்ளு வார்த்து, ஒரே மரத்தின் விறகினுல் எரித்து எட்டொன்ருகக் காய்ச்சி எலும்பு மயிர்முதலியவை களைப்போக்கி, பேய்க்கருப்பன் சாற்ருல் மைபோலரைத்து வெள்ளைத் துணியில் தடவி நிழலில் உலர்த்தி திரிசெய்து; தலைமண்டை யோட்டில் ஐங்கோலத் தைலம் வார்த்து ஷி திரியைப்போட்டு தீபமேற்றி மை வாங்கி ஜாலகீகாளைத் தியானித்து சிமிளில் வைத்துக்கொண்டு தேவையான வித்தைகளை நினைத்து நினைத்தபடி விளையாடலாம்.

---

## 5. மூலிகைகளுக்குச் சாபம் நிவர்த்தி

எந்த மூலிகையாக இருந்தாலும் குறித்த காலத்தில் அதனருகிற் சென்று கன்னிநூல் காப்பு கட்டி தூபதீபங் கொடுத்து,

ஓம் சத்தி சாபம் நசிநசி
சகல சாபம் நசிநசி
சித்தர் சாபம் நசிநசி
மூலிகை சாபம் நசிநசி
சகல தேவர்கள் சாபம் நசிநசி
ஓம் காளி ஓம் பிடாரி
ஓம் நசிமசி வய சுவாகா :

என்று ஒன்பது தரம் உருஜெபித்து ஒன்பதாவது தடவை சுண்டு விரல்க ளிரண்டும் நகங்கள் பத்தும் அதன்பேரில் படாமல், இலையைக் கிள்ளுகிறதோ செடியைப் பிடுங்கு

கிறதோ எபபடி செய்துகொண்டாலும் வியர்த்த மாகாது சித்தியாகும்.

---

## 6. மூலிகைகளுக்கு உயிர்கொடுத்தல்

மூலிகைகளுக்கு உயிர்கொடுக்கவேண்டுமாகில் வேண்டிய மூலிகையிடம் சென்று அதனிடம் சுத்தம் செய்து அதன் பிறகு காப்புகட்டி பொங்கலிட்டு தேங்காயுடைத்து தூப்தீபங் கொடுத்து,

ஓம் மூலி சர்வ மூலி
உன்னுடைய உயிர்
உன்னுடலில் நிற்க சுவாகா :

என்று முப்பத்திரண்டு விசை ஜெபித்து பிடுங்கவேண்டும். அவ்வாறு மூலிகைகளுக்கு உயிர் கொடாவிடில் அந்த மூலிகைகள் பிரயோஜனப்படாது.

---

## 7. நிலம் புரண்டி

நிலம்புரண்டி என்னும் மூலிகையானது சாதாரணமாக பூமியிலே இதர மூலிகையைப்போலவே விளைந்திருக்கும்.

அது மனிதர்களின் காற்றுவாடைப்பட்ட மாத்திரத்தில் பூமியைச் சுரண்டிக்கொண்டு உள்ளே போய்விடும். அதனாற்றான் அதற்கு நிலம்புரண்டி யென்ற பெயர் உண்டாயிற்று. அதைக் கண்டுபிடிக்க வேண்டுமானால் சில தேத்தான் கொட்டைகளை கையில் வைத்துக்கொண்டே நடந்துபோய்க் கொண்டிருந்தால், எந்தவிடத்தில் அம் மூலிகை யிருக்கின்றதோ அங்கு நமது கையிலிருக்கும் தேத்தான் கொட்டையினுடைய மகுத்துவத்தால் அது உள்ளே போகாது.

அப்படிப்பட்ட நிலம்புரண்டி மூலிகையை ஞாயிறு செவ்வாய் வியாழம் இந்த மூன்று கிழமைகளில் எந்தக் கிழமைகளிலாவது அதிகாலை சூரிய உதயத்திற்குமுன் சென்று அவ்விடத்தைச் சுத்தஞ் செய்து அச்செடிக்குச் சாபம் நிவர்த்திசெய்து, உயிர்கொடுத்து, காப்புகட்டி பொங்கலிட்டு தூபதீபங் கொடுத்து பிடிங்கிவந்து, குழித் தைலமிறக்கி அதோடு கோரோஜனை, ஜவ்வாது, பச்சை கர்ப்பூரம் இம்மூன்றையும் சமனெடையாகச் சேர்த்துக் குழைத்து மையாக்கி சிமிளில் அடைத்துக் கொள்ள வேண்டும். அந்த சிமிள்-மைக்கு ஆஞ்சனேய மந்திரத்தை ஆயிரத்தெட்டு தரமும், அஞ்சனாதேவி மந்திரத்தை ஆயிரத்தெட்டு தரமும் ஜெபித்து மைக்கு உயிருண்டாக்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

மேற்படி நிலம்புரண்டி மையை தேவையானபோது ஒரு பயரளவெடுத்து வெற்றிலையில் தடவிப்பார்க்க பாதாளத்திலுள்ள புதையல்களெல்லாம் கண்களுக்கு நன்றாகத் தெரியும்.

அவ்வேரைக் கருக்கி ஜலத்தில் கரைத்து புதையல் இருக்குதென்று சொல்லப்பட்ட விடத்தில் ஊற்றிவிட்டு வந்துவிடவும். மறுநாள் காலையில் போய்ப் பார்த்தால் அங்கு புதையலிருக்குமாகில் அவ்விடம் பத்தலாக வெடித்திருக்கும். புதையல் இல்லாதவிடமாக இருந்தால் சாதாரண பூமியாக இருக்கும்.

---

## 8. நீர்மேல் நெருப்பு

நீர்மேல் நெருப்பு அல்லது ஆகாயத்தாமரை என்னும் மூலிகையானது வியக்கத்தக்க மூலிகையாகும்.

அம்மூலிகை கட்டளைப்படி கொண்டுவந்து நன்ருக உலர்த்தி வஸ்திரகாயம் செய்துகொண்டு பத்திரப்படுத்தி தேவையானபோது கொஞ்சமெடுத்து வாயில் போட்டுக் கொண்டு காற்றுவாட்டமாக வஸ்திரங்களின் பேரிலாவது வைக்கோலின் பேரிலாவது அல்லது உடனே தீப்பற்றக் கூடிய வஸ்துக்களின் பேரிலாவது துப்பிவிட அதுகள் உடனே தீப்பற்றி யெரியும்.

•அதையே எரியும் விளக்கை யணைத்துவிட்டு உடனே அப்புகையின் வாட்டத்தில் ஒரு சிட்டிகை தூளை எரிய அணைந்த விளக்கானது திக்கென்று பற்றி யெரியும்.

---

## 9. கட்டுக்கொடி

கட்டுக்கொடியின் இரசத்தை ஜலத்தில் விட்டால் உடனே ஜலம் கட்டிப்போகும். அதை அல்வாயைப்போல் பில்லை பில்லையாக அறுத்து சாப்பிடலாம். இதனுல் திரேகத்திற்கு யாதொரு தீங்கும் உண்டாகாது. தாது புஷ்டியைக் கொடுக்கும். இதை பசும்பாலில் கலந்து சாப்பிட பேதி நிற்கும்.

இதை உத்தம வேளையில் விதிப்படி காப்புக்கட்டி பொங்கலிட்டு பலிகொடுத்து தூபதீபங் காட்டி பிடிங்கி வந்து குளிசமாடி கையில் போட்டுக்கொள்ள பூதபிசாசுக ளெல்லாம் விலகும்.

மேற்படி இலையை உலர்த்தி இடித்து சூரணம் செய்து வைத்துக்கொண்டு வேடிக்கையாக ஜனங்களைப் பார்த்து நான் ஜலம் முதலிய வஸ்துக்களை யெல்லாம் அல்வா செய்கிறேன் பாருங்களென்று சொல்லி, கொஞ்ச ஜலத்தில் சர்க்கரைப் போட்டுக் கலந்து இந்த தூளையும்போட்டு சுமார்

பத்து பதினைந்து நிமிஷம் பொறுத்துப் பார்க்க அது அல் வாயைப் போலவே இருக்கும் அதைக் கத்தியினுலறுத்து எல்லோருக்கும் கொடுத்து தானும் உண்ணலாம். அதனுல் யாதொரு தோஷமும் உண்டாகாது. திரேகத்தில் மேகத் தால் உண்டான வெள்ளை, நீர்சுருக்கு முதலான வியாதி களைப் போக்கி தாதுபுஷ்டி யுண்டாகும்.

---

## 10. விபூதியிலை

விபூதியிலை வாயில் மென்று தின்னு
விட்டடக்கிக் கொஞ்சம் தாடையிற் சன்னு
பழுதர வோடவே நாழிகை யெண்ணு
பத்தாலுலு மிளைப்பில்லை பாருண்ணு.

உரை:—விபூதி யிலையை வாயிற்போட்டு மென்று கொஞ்சம் தின்றுவிட்டு, கொஞ்சம் வாயின் தாடையில் அடக்கிக்கொண்டு, எந்த மட்டில் ஓடினுலும் ஓடலாம் இளைப்புண்டாகாது. நிற்கவேண்டுமானுல் ஏதேனும் ஒரு மரத்தைப் பிடித்துக்கொண்டு நிற்கவேண்டும். ஓடுவது சுமார் ஒரு காதத்திற்கு மேலும் ஓடலாம்.

இந்த கீரையை பருப்பிட்டு சமைத்து * சாப்பிடலாம், சகல வாய்வும் நிவர்த்தியாகும். இதை பாகப்படி எண் ணெய் காய்ச்சி கால் அரைமண்டலம் சாப்பிட கெர்ப்பபுழு. முடக்கு, பிடிப்பு, மலடு நீங்கி புத்திர சந்தான முண்டாகும்.

---

## 11. தக்காளி

அரவந்தீண்டி லுச்சியைக்கையால்
அரக்கித்தேய் தக்காளிச்சாற்றினை
விரைவுடனேமீளுந் தலைக்கேறிட்ட
விஷமிறங்கிக் குணப்படவதிகாரி.

உரை:—தக்காளி என்னும் மூலிகையின் மருத்துவமாவது, யாரேனும் ஒருவருக்கு பாம்பு கடித்து விஷமேறி விட்டால் உடனே அவர்களுடைய தலைஉச்சியை ஓட்டிலேனும் கத்தியிலேனும் கீறி அந்தவிடத்தில் தக்காளி ரசத்தை தாக்க தலையேறிய விஷமானாலும் உடனே தீரும்.

இதை பதார்த்தம்செய்து உண்ணில் அதிக ருசிகரமாக இருக்கும். மேகச்சூடு, சாதாரண உஷ்ணம் முதலியவைகள் தீரும்.

## 12. புல்லாமணக்கு

இதை ஞாயிற்றுக்கிழமை காப்பு கட்டி பொங்கலிட்டு தூப தீபங்கொடுத்து வேரோடு பிடுங்க வேண்டியது. இது சாதாரணமாக பல்லி முட்டையைப்போ லிருக்கும்.

ஷை புல்லாமணக்கை நிழலில் உலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்துக்கொள்ள வேண்டியது. காற்றுப் போகாமல் ஒரு கல்கார்க்கு புட்டியில் வைத்துக் கொள்ள வேண்டியது. இதை ஒருவராகனிடை காலை மாலை நெய்யில் குழைத்து சாப்பிட ஸ்திரீகள் புருஷர்களுக்கும் புருஷர்கள் ஸ்திரீகளுக்கும் வைத்த ஈடுமருந்து இருந்தவிடம் தெரியாமல் முறிந்து ஓடிப்போகும்.

## 13. கோபுரந்தாங்கி

இம் மூலிகைக்குச் சாபநிவர்த்திசெய்து காப்புக்கட்டிக் கொண்டுவந்து வாயில் போட்டு மென்று தாடையிலடக்கிக் கொண்டு எவ்வளவு கண்ணாடித் தூளையேனும் முறுக்கைப்போல் மென்று துப்பிவிடலாம்.

அதை குளிசமாடிக் காலில் கட்டிக்கொண்டு பெரிய பாராங்கல்லே எட்டியுதைக்க அது பின்னால் நகர்ந்து போய் விடும். வேரைப் பிடுங்கி வரும்போது பொங்கல் முதலிய பலி கொடுத்துக் கொண்டு வரவேண்டும் குளிசமாடும் போது விநாயகர் மந்திரம் 108-ஜபிக்க வேண்டும்.

---

## 14. சித்திரமூலம்

சித்திரமூலச் செடிக்குக் காப்புக்கட்டி சாபநிவர்த்தி செய்து பொங்கல் பலி தூபதீபங் கொடுத்துக்கொண்டு வந்து குளிசமாடி விளையும்படியான புலன்களில் புதைத்து வைக்க அப்புலன் விளைவில்லாது சாவியாய்ப்போகும்.

---

## 15. ஆடுதீண்டாப்பாளை

ஆடுதீண்டாப்பாளை செடிக்குக் காப்புகட்டி பொங் கல், பலி தூபதீபங் கொடுத்துக்கொண்டு வந்து ஐயுங் கிலியு மென்று உருகொடுத்து தெளிக்க கரிப்பூச்சுகள் நாசமாகப் போகும்.

ஷை செடியை முன்போல் கொண்டுவந்து 108-உரு ஜெபித்து ஜலம்விட்டரைத்து செடிகளின்பேரில் அள்ளித் தெளிக்க சகல புழுக்களும் நாசமாகும்.

மேற்படி செடியைக் காப்புக்கட்டிக் கொண்டுவந்து பூஜையில்வைத்து முன் மந்திரத்தை 108-உரு ஜெபித்து செடியில்வைக்க குருத்துப் புழுக்களெல்லாம் ஓடிப்போகும்.

ஷை செடியைக் காப்புகட்டிக் கொண்டுவந்து பிரணவ மந்திரத்தைக் கிரமப்படி 108-உரு செபித்து மரங்களின் வேரில் கட்டிவைக்க அதிகம் காய்க்கும்.

ஷை செடியைக் காப்புக் கட்டிக்கொண்டுவந்து நசி மசி யென்று 1008-உருக்கொடுத்து, நன்ருகப் பூர்க்கும் செடிகளிலும் காய்க்கும் செடிகளிலும் கட்டிவைக்க செடிகளும் மரங்களும் காய்ந்து உதிர்ந்து பட்டுப்போகும்.

ஷை செடியைக் கொண்டுவந்து அதன்மேலேயிருக்கும் பட்டைகளை மாத்திரம் உரித்து நிழலில் உலர்த்தி ஒருபலம் எடுத்துக்கொண்டு அதோடு ஒருபலம் கருவாப்பட்டையும் சேர்த்து எலுமிச்சம்பழ ரசம்விட்டு நெகிழ அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைகளாக உருட்டி நிழலிலேயேஉலர்த்தி புட்டியில் பத்திரப்படுத்தவேண்டும்.

ஷை மாத்திரை 1-2-தேகதிடமறிந்து இஞ்சி, தேன், முலைப்பாலில் கொடுக்க நாள்பட்ட சுரம், பழைய சுரம் முதலிய அறுபத்து சுரமும் ஓடிப்போகும்.

மேற்படி மாத்திரையை எருக்கிலைச்சாற்றில் கொடுக்க பாம்புவிஷம், காணுக்கடி முதலியவைகள் தீரும்.

---

## 16. வெள்ளெருக்கன்

நன்ருக முத்தின வெள்ளெருக்கன் செடியைக் கண்டு பிடித்து அந்த இடத்தை நான்குபுறமும் சுற்றிலும் பசுங் கோமயத்தால் சுத்தி செய்து, பூசநக்ஷத்திரம் பௌர்ணமி யுங்கூடிய ஞாயிற்றுக்கிழமை தினம் கன்னிநூல் காப்பு கட்டி நசிமசி மந்திரத்தால் சாபநிவர்த்தி செய்து உயிர் கொடுத்து, பொங்கலிட்டு தூபதீபங்கொடுத்து வசிய மோகனம் ஜெபித்து பிறகு அஷ்டகர்ம மந்திரங்களை ஒவ்வொன்றுக்கும் 108-உருகொடுத்து அதன் பிறகு செடியைச் சுற்றிலும் மண்ணைப் பறித்து, வேர் அருமல் ஆணி வேர் (நிலவேர்) உடன் கொண்டுவந்து குளிசமாடி குழந்தைகளுக்குக் கட்ட, குழந்தைகளுக்கு நேரிடும்

காற்றுக்கருப்பு பாலகிரகதோஷம், சந்து தோஷம், பக்ஷி தோஷம், குளிதோஷம், கனவில் திடுக்கிட்டு அலரி எழுந் திருக்குதல், தூக்கத்தில் மல ஜலம் தன் சுவாதீனமின்றி வெளியாகுதல் முதலிய பலவித தோஷங்களும் சூரியனைக் கண்ட பனிபோல் நிவர்த்தியாகும்.

மேற்படி எருக்கங்கட்டையினால் பிள்ளையார் செய்து வைத்துக்கொண்டு காலந்தவறாது நியமத்துடன் முன் சொன்ன கணேச மந்திரத்தை ஜெயித்து பூசித்து வந்தால் அஷ்ட ஐஸ்வரியங்களும் உண்டாகும்.

மேற்படி கட்டையில் பலகைசெய்து அதில் சிதம்பரச் சக்கரத்தை ஸ்தாபனஞ் செய்து ஜெபித்துக்கொண்டுவரும் பக்ஷத்தில் அவர்களுக்கு இவ்வுலகத்தில் ஆகாத காரியங் கள் ஒன்றுமே இல்லை. ஆனால் தகுந்த ஆசானைக்கொண்டு முடிக்கவேணடும்.

அப்படிப்பட்டவர்களை கண்டால் ஆடாத பேய்களெல் லாம் ஆடி ஓடிப்போகும்.

அதன் இலைகளை வதக்கிக் கட்டிகளின் பேரில் போட் டால் எப்படிப்பட்ட கட்டிகளும் உடையும்.

அதில் இருக்கும் நாரை யெடுத்து கயறுகத் திரித்து தோஷ நிவாரண மந்திரத்தை ஜெபித்து இருபத்தொரு முடி போட்டு குழந்தைகளுக்கு அரைஞாண் கயறு கட்ட சகல தோஷமெல்லாம் அணுகி யிருக்கில் விலகிப்போகும், அது இருக்கும் இடத்தில் அணுகாது.

மேற்படி இலையை நிழலில் உலர்த்தி பொடியாக்கி வெள்ளெலியின் கருவைச் சேர்த்து அரைத்து சீலையில் தடவிகாயவைத்து திரியாக்கி அத்திரியை அகலில்போட்டு வௌவாலின் நெய்யூற்றி விளக்கேற்றி மைவாங்கி அந்த

மையை புதுச்சட்டிக்கு ஆலாக்குருவியின் முட்டையை உடைத்து சுற்றிலும் தடவி காயவைத்து அதில் பிடித்து வழித்து சிமிளில் வைத்துக்கொண்டு அதற்கு ஆஞ்சநேய மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருகொடுத்து வெற்றிலேயில் தடவிப் பார்க்க உலகத்தில் நடக்கும் சகல காரியமும் தெரியும்.

மேற்படி பலகையில் வசிய சக்கரத்தை ஸ்தாபனஞ் செய்து பூசையில் வைத்து பூசித்து வரில் சர்வ வசியமும் லக்ஷ்மி கடாக்ஷமும் உண்டாகும்.

---

## 17. சார்வேளை

வென்சார்வேளை வேண்டுமவுரியில்
நாளேயேயரைத் தோதிடமோகினி
காளேகாராவின் நெய்யில்குழைத்திட
ஆளும்ராஜ வசியமதாகுமே.

உரை:—வெள்ளை சார்வேளையாகக் கொண்டுவந்து அவுறிச்சாற்றிலரைத்து மோகினிமந்திரத்தை உச்சாடித்து வேண்டும்போது கொஞ்சமெடுத்து காராம்பசுவின் நெய் யில் குழைத்து திலர்தமிட ராஜவசியமும் சர்வ வசியமும் உண்டாகும்.

---

## 18. இரட்டைப் பிரமட்டை

மட்டைபிரமட்டை யிரட்டையென்பதில்
கட்டுமாணுக்கும் பெண்ணிலையாகிவிடும்
ஓட்டும்பெண்ணுக்கே யாணிலையாகிடும்
திட்டமாய்பூண்டுடன் தேய்க்கவசியமே.

உரை:—இரட்டைப் பிரமட்டை யென்பது இரண்டு வகையுண்டு. அதில் ஆண் இலை யென்றும் பெண்ணிலை யென்றும் உண்டு. ஆண் இலை நீட்டமாகவும் பெண் இலை குட்டையாகவும் இருக்கும். ஆணுக்குப் பெண் இலையாக வும் பெண்ணுக்கு ஆண் இலையாகவும் ஐந்தாறு இலை யைக் கிள்ளி அதோடு இரண்டு திரிபூண்டையும் சேர்த்து கசக்கிப் பிழிந்து உச்சியில் தேய்க்க என்னளும் இருவரும் பிரியமாட்டார்கள்.

---

## 19. நாயுருவி

ஆலன்வேலின் அதிகமேயென
நாளும்நா யுருவிவிளக்கிட
நீளும்சர்வ வசியம்பலபல
கேளும்மற்றதும் வாளின்ஜாலமே.

உரை:—நாயுருவி வேரால் நாற்பதுநாள் தந்த சுத்தி செய்துவந்து அந்த வேர் நாற்பதையும் கொளுத்தி சாம்ப லாக்கி பல் துலக்கிவர சர்வமும் வசியமாகும். ஆனல் உடம்பு அதிக உஷ்ணமாகும். பசும்பால் சாப்பிடவேண்டி யது. அதன் இலையை மென்று வாயில் அடக்கிக்கொண்டு எவ்வளவு கண்ணாடி பில்லையையேனும் மென்று துப்ப லாம். பல்கூசாது, வாயறுக்காது முறுக்கைப்போல் மெல்லலாம்.

அதன் வித்தை பாலில் அரைத்து புன்னக்காய் பிரமா ணம் சாப்பிட்டு பால்சாப்பிட மூலம்-சீதபேதி-கிராணி நீங் கும். தாதுபுஷ்டி யுண்டாகும், இதுவே ஆள்மடக்கி என் றும் சொல்லப்படும்.

## 20. அழிஞ்சில்

அழிஞ்சில் மரத்திற்கு ஆதிவாரம் காப்புகட்டி பொங்க லிட்டு பலிகொடுத்து தூபதீபங் காட்டி ஜெகன்மோகினி மந்திரத்தை ஆயிரத்தெட்டு தரம் உருவு கொடுத்து ஏறு முக சூரிய உதயத்திற்கு ஏறு அழிஞ்சில் விதைகளாக எடுத்துக் கொள்ள வேண்டியது. அதைக் குழித்தைலம் இறக்கிக் கொண்டு அந்த தைலத்தோடு

சுழல்வண்டு
மின்னும்பூச்சி
கஸ்தூரி
கோரோசனை
புனுகு
குழியானை
பேய்க்கரும்பு
குங்குமப்பூ
பச்சைகற்பூரம்
ஜவ்வாது

இந்த பத்து தினுசுகளையும் கூட்டி அரைத்து சிமி ளில் அடைத்து வசியவுரு கொடுத்து வேண்டும்போது திலர்தமிட உலகில் சகல காரியமும் வசியமாகும்.

---

## 21. இராஜவசியம்

ஆனைவணங்கி
அருகு
காஞ்சோரி
முசுமுசுக்கை
பொற்றலைகையான்
நிலப்பனைவேர்
வெள்ளெருக்கு
ஆவாரை
சுழலாவாரை
வேம்பு

இவைகளின் வேரை சமபாகமாக எடுத்துச் சூரணித்து தேனில் குழைத்து திலர்தமிட இராஜவசிய மாகும்.

---

## 22. ஸ்திரீ வசியம்

| | |
|---|---|
| தாரம் | துருசு |
| செஞ்சந்தனம் | சவ்வாது |
| கர்ப்பூரம் | குப்பைமேனி |
| கொன்றை | |

இதுகளை சூரணித்து தேனில் குழைத்து திலர்தமிட ஸ்திரீ வசியமாகும்.

---

## 23. மிருக வசியம்

| | |
|---|---|
| விஷ்ணுகிரந்திவேர் | விஷங்கொல்லி |
| காடுகட்டி | தொட்டால்சுருங்கி |
| நாயுருவி | முன்னை |
| சங்கன்வித்து | அழிஞ்சில் |

இவைகளை ஓர் நிறையாக எடுத்து இடித்து வஸ்திர காயஞ் செய்து தேனில் குழைத்து திலர்தமிட்டு மிருகங்களின் எதிரே செல்ல எப்படிப்பட்ட துஷ்ட மிருகங்களாக இருப்பினும் தன்னைக் கண்டதும் வசியமாகும். நம் சொல்படி நடந்து பின் தொடரும்.

---

## 24. சர்ப்ப வசியம்

பொற்றலைக்கையான் தும்பைவேர்

| | |
|---|---|
| நிலம்புரண்டி | சிறுகீரை |
| அவுரி | கரியசாலை |
| சிகப்புநாயுருவி | காஞ்சொரி |
| பொற்கொடி | ஆடையொட்டி |

இவைகளை சமயெடையாக வெடுத்து புத்து தேனு லரைத்து நெற்றியில் திலர்தமிட்டுச் செல்ல சர்ப்பங்கள் வசியமாகி படமெடுத்தாடும்.

---

## 25. லோக வசியம்

நின்றுல்சிணுங்கி செவ்வகத்தி
ஆவாரைமுல்லே கொழுந்தெட்டு
கூத்தன்குதம்பை

இவைகளின் வேரைக் கொன்றை பன்னீர் விட்டு அரைத்து திலர்தமிட்டுச் செல்ல லோகத்திலுள்ளவர்க ளெல்லாம் வசியமாகி, நாம் கேட்டதெல்லாங் கொடுப் பார்கள்.

---

## 26. சத்துருக்கள் வசியம்

பொற்றிலேக்கையான் வெள்ளெருக்கு
விஷ்ணுகிரந்தி

இவைகளின் வேரை காராம்பசுவின் நெய்யால் அரைத்து திலர்தமிட்டுச் செல்ல எப்படிப்பட்ட சத்துருக்க ளாயினும் வசியமாகி தம்மிஷ்டம்போல் நடப்பார்கள்!

---

## 27. சர்வ வசியம்

பொற்றலேக்கையான் வெள்ளெருக்கு
காட்டட்டை மண்டுகப்பிச்சு

இவைகளை ஐம்மலஞ் சேர்த்து அரைத்துக்கொண்டு அவைகளை நமக்கிஷ்டமானவர்களுக்குக் கொடுக்க எந் நாளும் பிரியமாட்டார்கள்.

---

## 28. ஜால வசியம்

| | |
|---|---|
| வெள்ளெருக்கு | அழுகண்ணி |
| கோரோசனை | மண்டுகப்பிச்சு |

இவை நான்கையும் எருக்கன்பழுப்புச் சாற்றல் அரைத்து நமக்கிஷ்டமானவர்கள் மேல்பூச அவர்கள் வசியமாகி நம்மைவிட்டு அகலமாட்டார்கள். பின் தொடருவார்கள்.

---

## 29. இகபர வசியம்

| | |
|---|---|
| கஸ்தூரி | குங்குமப்பூ |
| புனுகு | ஜவ்வாது |
| சந்தன அத்தர் | சாம்பிராணிப்பூ |
| கோரோசனை | பச்சைக்கர்ப்பூரம் |

இவைகளை சமயெடையாக எடுத்து ஒன்றுகூட்டி அரைத்து சிமிளில் பதனப்படுத்திக்கொண்டு நெற்றியில் திலர்தமிட்டுச் செல்ல ஸ்திரீ,புருஷர்,அரசர்,தேவதாவசியம் முதலிய சர்வகாரியமும் சித்தியாகும். சரீரத்திற்கு ஆரோக்கியமும் முகதேஜசும் உண்டாகும் நறுமணங் கமழும்.

---

## 30. புருஷ மோகனம்

| | |
|---|---|
| சிகப்பு ஆமணக்கு | சிகப்பு அகத்தி |
| சிகப்பு நாயுருவி | சிகப்பு முள்ளி |
| புல்லுருவி | மானைத்தேடிக்கொன்றான் |

இவைகளில் தன் கருவைச்சேர்த்து கானக்குறத்தி பால்வார்த்து அரைத்து திலர்தமிட புருஷ மோகனமாகும்.

---

## 31. ஸ்திரீ மோகனம்

குங்குமம்
அல்லி
சந்தனம்
கோடாசூரி
மண்டூகம்
வாழை
அலரி
நீலி
செங்குன்றி

இவைகளை யெல்லாம் புத்துத்தேனாலரைத்து திலர்தமிட ஸ்திரீ வசியமாகும்.

---

## 32. மிருக மோகனம்

வெண்குன்றி
கெச்சக்காய்
முத்தக்காசு
நரிமண்டையோடு

இவைகளைச் சமயெடையாக எடுத்து முலைப்பால் விட்டரைத்து திலர்தமிட்டுக் கொள்ள மிருக மோகனமாகும்.

---

## 33. சத்துரு மோகனம்

நாயுருவி
பொன்னாங்காணி
தூதுவேளை
வெண்குன்றி
செங்கழுநீர்
சிறுமுன்னை

இவைகளை சரியெடையாக எடுத்து கோடாசூரி சாற்றாலரைத்து சிமிளில் வைத்துக்கொண்டு வேண்டும்போது திலர்தமிட்டுச் செல்ல சத்துருக்கள் மோகனமாவார்கள்

---

## 34. சொர்ன மோகனம்

மருதன்
மருளூமத்தன்
ஊமத்தை
நன்னாரி

இவைகளின் வேரை சமனிடையாக எடுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து வெள்ளுமத்தன் சாற்றால் ஒரு ஜாமம் அரைத்து அதனோடு கொஞ்சம் கோரோசனை-புனுகு சந்தன அத்தர் சேர்த்து புத்துத்தேனூலாட்டி நெற்றியில் திலர்தமிட சொர்ன மோகனமாகும். இதற்கு இலக்ஷ்மி மோகனம் ஜெபிக்க வேண்டும்.

---

## 35. லோக மோகனம்

முல்லை — வெண்கொழுஞ்சி
காயம் — நரிப்பயறு
குன்றி — கொச்சி
கரிசலாங்கண்ணி — ஐவிரலிவேர்
சோம்பு — கெஞ்சா

இவைகளை சமயெடை யெடுத்து நன்னாரிவேர் சாற்றா லரைத்து திலர்தமிட லோக மோகனமாகும்.

---

## 36. இராஜ மோகனம்

குங்குமம் — புல்லுருவி

இவ்விரண்டில் நெய் தேன் ஆலம்பால் இவைகளைச் சமன் சேர்த்து அரைத்து திலர்தமிட இராஜமோகனமாகும்.

---

## 37. சர்வ மோகனம்

ஆம்பல் — அல்லி
அதிமதுரம் — கோஷ்டம்
ஆலம்புல்லுருவி — வெண்குன்றிவிரை

இவைகளை முலைப்பாலா லாட்டித் திலர்தமிட சர்வ மோகனமாகும்.

---

## 38. தம்பனம்

கருங்குன்றி
ஆவாரை
ஊமத்தை
சுவரொட்டி
சதுரக்கள்ளி
கறுப்புகெஞ்சா
திகைப்பூண்டு
நிலத்தம்பி

இவைகளைச் சரியெடையாக எடுத்துக் கொசுத் தேனு லாட்டி திலர்தமிட தம்பனமாகும்.

---

## 39. மிருகத் தம்பனம்

பச்சோந்தி
இருள்மூலி
பாலை
கன்னிமூலம்
நன்னாரி
பேய்ப்பீர்க்கு

இவைகளை ஓர் எடையாக எடுத்து பசுநெய்யில் அரைத்து திலர்தமிட மிருகத் தம்பனமாகும்.

---

## 40. ஆயுதத் தம்பனம்

விஷ்ணுகிரந்திவேர்
வாழைவேர்
பச்சைப்பாம்பு
கண்டங்கத்திரி
பொன்முசுட்டைவேர்
பேவாழைத்தண்டு
பருத்தி
மூங்கில் இலை

இவைகளை சரியெடையாக எடுத்து புத்துதேனில் அரைத்து திலர்தமிட ஆயுதத் தம்பனமாகும்.

---

இவைகளை முலைப்பாலா லாட்டித் திலர்தமிட சர்வ மோகனமாகும்.

---

## 38. தம்பனம்

| | |
|---|---|
| கருங்குன்றி | சதுரக்கள்ளி |
| ஆவாரை | கறுப்புகெஞ்சா |
| ஊமத்தை | திகைப்பூண்டு |
| சுவரொட்டி | நிலத்தம்பி |

இவைகளைச் சரியெடையாக எடுத்துக் கொசுத் தேனு லாட்டி திலர்தமிட தம்பனமாகும்.

---

## 39. மிருகத் தம்பனம்

| | |
|---|---|
| பச்சோந்தி | கன்னிமூலம் |
| இருள்மூலி | நன்னாரி |
| பாலை | பேய்ப்பீர்க்கு |

இவைகளை ஓர் எடையாக எடுத்து பசுநெய்யில் அரைத்து திலர்தமிட மிருகத் தம்பனமாகும்.

---

## 40. ஆயுதத் தம்பனம்

| | |
|---|---|
| விஷ்ணுகிரந்திவேர் | பொன்முசுட்டைவேர் |
| வாழைவேர் | பேவாழைத்தண்டு |
| பச்சைப்பாம்பு | பருத்தி |
| கண்டங்கத்திரி | மூங்கில் இலை |

இவைகளை சரியெடையாக எடுத்து புத்துதேனில் அரைத்து திலர்தமிட ஆயுதத் தம்பனமாகும்.

---

## 41. சுக்கிலத் தம்பனம்

| | |
|---|---|
| விளாம்பிசின் | விஷ்ணுகிரந்திவேர் |
| சிவந்தகஞ்சா | ஊமத்தன்விரை |
| கறுப்புகஞ்சா | மருள்ஊமத்தன் |

இவைகளை சமஎடையாக எடுத்து பசுவின் நெய்யில் குழைத்து திலர்தமிட சுக்கில ஸ்தம்பனமாகும்.

---

## 42. ஜல ஸ்தம்பனம்

| | |
|---|---|
| நீர்மேல்நெருப்பு | வன்னி |
| கட்டுக்கொடி | நிண்ணுசிணுங்கி |
| நிலம்புரண்டி | பேய்முசுட்டை |
| தூதுளை | சீரகம் |
| இருபிரம்பு | களத்தி |
| முடக்கொத்தான் | |

இவைகளை ஓர் நிரையாக எடுத்து இடித்து தேன் விட்டு அரைத்து திலர்தமிட ஜலஸ்தம்பனமாகும்.

---

## 43. அக்கினி ஸ்தம்பனம்

| | |
|---|---|
| சங்கன்வேர் | கற்றாழைவேர் |
| தாமரைக்கிழங்கு | குப்பைமேனி |
| வெள்ளைக்காக்கட்டான் | செவ்வகத்தி |
| சுண்டை | செங்கொடி |
| வட்டத்துத்தி | ஓரிதழ்தாமரைரசம் |

இவைகளை ஒன்ருகக்கூட்டி யரைத்து திலர்தமிட்டுக் கொள்ள அக்கினி ஸ்தம்பனமாகும்.

---

## 44. தேவ ஸ்தம்பனம்

கொத்தான்
கொளுஞ்சி
நிலவாகை
ஆவாரை

இவைகளைச் சரியெடையாக எடுத்து பசும்பாலில் அரைத்து திலர்தமிட தேவஸ்தம்பனமாகும்.

---

## 45. சர்வ ஸ்தம்பனம்

சிரியாநங்கை
நந்தியாவட்டை
சிறிசின்னி
பெருசின்னி
முகமினுக்கி
நாகவல்லி
ஆத்திவேர்
செவ்வாமணக்கு
சுவரொட்டி
கறுங்குன்றி
தண்ணீர்விட்டான்

இவைகளை ஓர் நிரையாக எடுத்து இடித்து வஸ்திர காயஞ் செய்து தேன்விட்டரைத்து திலர்தமிட சர்வமும் ஸ்தம்பனமாகும்.

---

## 46. உச்சாடனம்

தடையத்தான்
பாம்புகண்ணி
நத்தைச்சூரி
சாஸ்திரபேதி
குடியோட்டி
நாய்மயிர்
கழுதைப்பட்டை
அதிவிடயம்

இதுகளை சமயெடையாக எடுத்து தேனில் அரைத்து திலர்தமிட சர்வ உச்சாடனமாகும்.

---

## 47. சத்துரு உச்சாடனம்

இலக்கள்ளிவேர் திகைப்பூண்டு
அரமுறித்தான் காக்கைக்கூடு
வேம்பு பிணஞ்சுட்ட எலும்பு
தூரச்சிலை

இவைகளைச் சேர்த்து செய்ய சத்துரு உச்சாடனமாவார்கள்.

---

## 48. மிருக உச்சாடனம்

நரிமிரட்டி இருவரைமிரட்டி
எருமைப்புட்டை புளியாரைச் சுட்டசாம்பல்
சீதாதேவி செங்கழுநீர்

இவைகளைச் சேர்த்து செய்ய மிருக உச்சாடனமாகும்.

---

## தலைப்பேன் சாகும் சூட்சம்

புலிப்பாணி முனிவரைத்தியானித்து பாதரசத்தையும் கந்தகத்தையும் சரியெடையாகக் கொண்டு கல்வத்தி லிட்டரைத்து பெரும்பேன் பிடித்துள்ளவர்கள் தலையில் வைத்துக்கட்ட சற்று நேரத்திற்குள் பேன்களெல்லாம் ஈறு நமுடுடன் மடிந்துபோம்.

---

## மேட்டுப்பூச்சிகள் சாகும் சூட்சம்

தாமரையிலையை நறுக்கிப் பொடித்து மேட்டுப்பூச்சிகளுள்ள விடங்களில் போட்டுவைக்க நாசமடையும்.

## தாது கெட்டிப்படும் சூட்சம்

ஆடுதீண்டாப்பாளை விரை பூமிச்சக்கரைக் கிழங்கு பூனைக்காலிவிரை இவைகளை வகைக்கு வராகனெடை 2 எடுத்துப் பசும்பாலில் அரைத்து 40 மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி 20-நாள் காலை மாலை இருவேளையும் உட்கொண்டு வந்தால் தாது கெட்டிப்படும், எலுமிச்சம்பழம் சாப்பிட்டால்தான் கலிதமாகும். சித்துப் புருஷர் முறை.

## சொக்குப்படி செய்யும் சூட்சம்

கெச்சைக்காய்வேர் ஆதம்வேர் அப்பைக்கோவைக் கிழங்கு சொக்குப்பாக்கு நிலப்பனங்கிழங்கு தாளிவேர் பேயகத்திவேர் குப்பைமேனிவேர் வேளைவேர் ஊமத்தன் விரை நஞ்சுக்கொடி தூர ஸ்திரீ சிலை பைத்தியம்பிடித்தவனைக் கொளுத்திய சாம்பல் ஊமையின் மண்டையோட்டுப் பொடி இவைகளை யெல்லாம் வகையொன்றுக்கு 5 வராகனெடையாக யெடுத்துப் பொடிசெய்து, பேயத்திப்பால் ஆலம்பால் இவைகளை விட்டரைத்து காயவைத்து பொடியாக்கி அப்பொடியை யார்பேரிலாகிலும் தூவ அவர்கள் மதிமயங்கி நீ கேட்டதைத் தருவார்கள். நீ அழைத்த இடங்களுக்கும் வருவார்கள். அவர்கள் சித்தந் தெளியவேண்டுமானால் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ் செய்து வைக்கவும் மயக்கந்தெளிந்து பழையபடி ஆவார்கள்.

## பெண்ஜாதி வசிய சூட்சம்

கார்த்திகைமாதம் முதல் சுக்கிரவாரம் அமிர்தயோகத்தில் மிளகு சாரணைச் செடிக்கு காப்புகட்டி பொங்கலிட்டு வாழைப்பழம் தயிர் நெய் வெல்லம்வைத்து தூபதீபங்

காட்டி அதை நீயே புசித்துப் பின் வேரருமல் மண்ணைத் தோண்டி எடுத்துப் பொன்ருல் தாயத்தை செய்து அதி லடைத்து தேவமோகினியை மனத்தில் தியானித்து வலது புஜத்தில் கட்டிக்கொள்ள உனக்கு அடங்காமல் பராமரிக் கையாயிருக்கும் உன் பெண்சாதி அதுமுதல் காலேச்சுற்றி வரும் நாயைப்போல் உன்னைப் பிரியாமற்படிக்கு உன் னிஷ்டப்படியே நடந்துகொள்ளுவாள்.

## புருஷன் வசிய சூட்சம்

தைமாதம் முதல் சோமவாரத்தில் சித்தயோகமா யிருக்குஞ் சமயம் பார்த்து சந்திரசேகரரை தியானித்து தனக்குள் தானே மூன்று தரம் வலம் வந்து ஆகாயத்தை நோக்கி தலேமேல் இரண்டு கைகளையுங்கொண்டுகும்பிட்டு சிவப்பு நாயுருவிவேர் பொன்ருவாரை பொன்ருங்கண்ணி செம்முள்ளி சிவந்த கஞ்சா புல்லாமணக்கு ஊமத்தை இவைகளின் சாறு வராகனிடை ஒன்ருகஎடுத்து கல்வத்தி லிட்டு அத்துடன் புனுகுஜவ்வாது கோரோசனை கஸ்தூரி இவைகளை வகையொன்றுக்கு வராகனெடை ஒன்ருகச் சேர்த்து கொம்புத்தேன் சிற்றண்டக்கரு காராவின் நெய் இவைகளை தேவையான வரைக்கும் சரிபாகமாகவிட்டு அரைத்து மைபோலானபின் வழித்தெடுத்து பொன் சிமிளில் அடைத்து தன் வசமாகவே வைத்துக்கொண்டு மகாலோக லீலா புருஷனே எனக்குத் துணையாகவிருந்து என் புருஷனை என்வசமாக்கித் தரவேண்டுமென்று அதைத் தொட்டுத்திலர்தமிடடுக்கொள்ளதன்மேல்விருப்ப மில்லாமல் திரியும் புருஷன் தாசி வேசிகள் காந்தனு யிருந் தாலும் அல்லது மாமிநாத்திகள் வார்த்தைகளைக் கேட்ப வனுயிருந்தாலும் உடனே உன்வசப்பட்டு நகமும் சதையும் போல் கூடிக் குலாவி யிருப்பீர்கள்.

## மூதேவியகல இலட்சுமி குடியிருக்க

பேய் பிசாசு முனி தபமுனி சங்கிலிமுனி காட்டேரி இருசி ஜின் முதலியவைகள் வீடு காடு தோப்புத் துறவு ஜனங்கள் நடமாடாத இடங்களில் இருந்துகொண்டு ஒண்டியாய் போவார் வருவாரை பயப்படுத்தி ஏமாற்றிக் கொண்டிருக்குமிடந் தெரிந்தால் ஆதிவாரம் அதிகாலையிலெழுந்து எருமை மூத்திரத்தையும் ஆட்டு மூத்திரத்தையும் கழுதை மூத்திரத்தையும் குதிரை மூத்திரத்தையும் நாய் மூத்திரத்தையும் ஒன்ருய்க் கலந்து அவ்விடத்துக்கு எடுத்துக் கொண்டுபோய் தெளித்துவிட்டு பாண்டத்தை தூரைவிட்டு அவ்வோடுகளில் நான்கெடுத்து நான்கு பக்கங்களில் புதைத்துவிட்டு திரும்பிப்பார்க்காமல் வந்துவிடவும். பிறகு மூன்றுநாள் கழித்து கொஞ்சம் அரைத்த மஞ்சள் குங்குமம் தேங்காய் பழம் புஷ்பம் கர்ப்பூரம் சாம்பிராணி வெற்றிலைப்பாக்கு செந்தாமரை இவைகளைக் கொண்டு போய் அவ்விடத்தில் தண்ணீர் தெளித்து தாமரையிதழ்களைப் பரப்பி அதன்பேரில் அரைத்த மஞ்சளை வைத்து குங்குமமிட்டு புஷ்பஞ்சாற்றி தேங்காயுடைத்து வைத்து தூபங் காட்டி என் இருதய கமலத்தில் வீற்றிருக்கும் உலகராணி அம்மணி இப்போது நீ எழுந்தருளி யிருக்கும் இவ்விடம் இன்றுமுதல் இலட்சுமிகரமும் குபேரசம்பத்தும் நீங் காமலிருக்க வேண்டும் என்று முக்கால் வலம் வந்து மூவிருகால் தண்டனிட்டுப் பணிவாளுகில் அன்று முதல் மேற்சொன்ன மூதேவிக்கூட்டம் ஒழிந்து இலட்சுமி கரமா யிருந்துவரும்.

## பெண்களாடும் தெய்வமோட

சிற்சில வீடுகளில் பெண்கள்மேல் தெய்வமிருப்பதாகக் கூறிக்கொண்டு வேளையில்லாத வேளைகளிலெல்

லாம் ஓ ஹா ஓ ஹா வென்று ஓங்காரம் போட்டு குழந்தை குட்டிகளையும் ஏமாந்தவர்களையும் திடுக்கிடவும் பயப்படவுஞ் செய்யும் முனி காட்டேரி முதலியவைகள் ஆடுகிற சமயத்தில், கல்லுருவி புல்லுருவி கழுதை மயிர் தலைமயிர் இவைகளை ஒன்ருய்ச் சேர்த்து கருங்கம்பளிக் கயிற்ருல் கட்டி அ-இ-உ என்னும் மூன்றட்சரத்தையும் மூன்றுதரம் உச்சரித்து தலையாட்டுபவன் வீட்டின் கூறையில் சொருகிவிட தெய்வமாடாது. அதை யெடுத்துவிட்டால் ஆடும்.

## பதிவிளக்குப் பேசாதிருக்க

பதிவிளக்கு வைத்துக் குறிகேட்கும் பூசாலி கர்வங் கொண்டவஞ யிருந்தால் அவன் வைக்கும் விளக்கின்கீழே சுடுகாட்டில் பிணத்தைச்சுற்றி யுடைக்கும் குடத்தின் ஓட்டு பில்லையில் ஒன்றைக்கொண்டுவந்து வைத்துவிட்டால் அவன் எத்தனை தேவர்களை அழைத்து வர்ணித்தாலும் அவ்விளக்குப் பேசாது- யாரோ கட்டு கட்டிவிட்டார்களென்று பிரலாபிப்பான். அப்போது நீ அவனை நோக்கி இவ்வளவு தாஞ உன் பூசாலித் தனமென்று கூறி அவனைக்கொண்டே அந்த ஓட்டை யெடுத்துவிடச் செய்யவும். பிறகு பதிவிளக்கு நன்ருய்ப் பேசும். அவன் உன்னைப் புகழ்ந்து கொண்டாடுவான்.

## குன்ம வியாதி தீர

உலகத்தில் அனேகருக்கு குன்ம வியாதி தீராமலிருக்கிறதை நாம் பார்த்திருக்கிருேம். அவ் வியாதி தீரவேண்டுமாஞல் காலையில் தும்பைச் செடியின் அருகிற் சென்று சூரிய பகவானை வலம்வந்து நமஸ்கரித்து இரண்டு கையிலும் அவ் விலையைப் பரித்து ஒரு பிடி தாழ போட்டு விட்டு மற்றொரு பிடியைக் கலவத்திற் போட்டு வெள்ளை வெங்

காயஞ் சேர்த்தரைத்து சுண்டைக்காய் வீதம் உருண்டைகளாக்கி வேளை ஒன்றுக்கு 3-உருண்டை வீதம் 4-நாளைக்கு விடாமல்படி அரிசி தவிட்டிற் பிரட்டி தின்றுவர குன்மங் தீரும்-

## சங்கிலி உருவ

ஜாலமாடு மிடத்திலும் மோடி யெடுக்கு மிடத்திலும் அல்லாப் பண்டிகையிலும் நெருப்பில் காயவைத்து இரும்புச் சங்கிலியை உருவ வேண்டுமானால் கற்ருழைச் சோறும் வெங்காயச்சாறும் விளக்கெண்ணையும் ஒன்ருய்க் கலந்து உருவினால் சங்கிலியானது தகதகவென்று ஜுவாலித்து எரியும். காண்போர் அதிசயிப்பார்கள்.

## ரோஜாபுஷ்ப அத்தர் செய்ய

ஒரு பாத்திரத்தில் ரோஜா புஷ்பங்களைக் கொட்டி நிரம்ப சுத்தஜலம் விட்டு பனியில் வைத்தெடுத்தால் அதிக அத்தர்மிதக்கும் அதை கொஞ்சம் பஞ்செடுத்து மெதுவாய் கொஞ்ச கொஞ்சம் தொட்டெடுத்து சிறிய சீசாவில் சேர்த்துக் கொள்ளவும். பரிமளமா யிருக்கும்.

## புருஷத்தன்மை யுண்டாக

தாது சீனித்தவர்கள் முருங்கப்பட்டை முருங்கை விதை தேத்தாங்கொட்டை பூனைக்காலிவிதை பூமிசர்க் கரைக்கிழங்கு சந்தனம் இவைகள் வராகனெடை இரண்டு எடுத்து தேங்காய்ப்பாலிலரைத்து காலை மாலை இருவேளை உட்கொள்ள இழந்துபோன புருஷத்தன்மை மீண்டும் உண்டாகும்.

## வயறு பெருக்க

சிறுகண்பூளைவேர் குப்பைமேனிவேர் இரண்டையும் சரியெடையாக எடுத்து மென்று வாயிலடக்கிக்கொண்டு பெரிய விருந்து நடக்கும் இடத்துக்குப் போய் சாப்பிட எத்தனை இலை சாப்பிட்டாலும் சாப்பிடலாம்.

## மோடி வித்தைக்கு கருந்தேள்

பிரமதேவனை மனதிலிருத்தி எருமைச்சாணியை நீர் விட்டுக் கரைத்து குழம்பாக ஒரு பாண்டத்தில் ஊற்றி வாய்மூடி பூமியில் புதைத்து ஒரு மண்டலஞ் சென்று எடுத்துப் பார்க்க அதன் நிறைய கருந்தேளிருக்கும் மோடி வித்தை ஜாலம் செய்பவர்களுக்கும் இத்தேளைக் காட்டி தேள் மருந்து விற்பவர்களுக்கும் மிக முக்கியமானது.

## வெள்ளைத் தேள்

எருமை சாணத்தை நீக்கி பசுஞ்சாணத்தால் மேலே கருந்தேளுக்குச் சொன்னபடி செய்தால் வெள்ளைத் தேள் களா யிருக்கும். இதை மோடி வைப்பவர்கள் உபயோகிப்பார்கள்.

## (இதுவுமது)

பேன்கொட்டையை அரைத்து தலையில் தடவி நன்ருய் ஊறினபின் தலைமுழுகப் பேன்களெல்லாம் உதிர்ந்துவிடும். இவ்வாறு பேன் இருக்கும்போது செய்யவும்.

## புதிரு முளைக்க

மண்ணை கீரைப்பாத்தியாகக்கட்டி அதில் பனைவெல்லத் தண்ணீரில் ஊறப்போட்ட வைக்கோல் கூளத்தைப்

அதன்பேரில் ஷ வெல்லத் தண்ணீரையே தெளித்து வர புதிஞ முளைத்து வளரும்.

## பகைவர் தாமே வணங்கிவர

ஆதிவாரத்தில் வெள்ளைச் சார்வேளைவேரை அவுரிச் சாற்ருலரைத்து புருவத்தின் மையத்தில் இட்டுக்கொண்டு வெளியே போக எதிரிகள் கத்திக் கட்டிகளா யிருந்த போதிலும் உன்வசமாவார்கள்.

## இங்கி செய்ய

கடுக்காய்ப்பிஞ்சு அல்லது மாசிக்காய் 5-பங்கு காசிக் கட்டி 1-பங்கு அன்னபேதி 2-பங்கு வேலம் பிசின் அல்லது விளாம்பிசின் அரைபங்கு இவைகளைப் பொடியாக்கி தேவை யானபோது கொஞ்சம் எடுத்துப் புட்டியில் போட்டு வெந் நீரேனும் தண்ணீரேனும் கொஞ்சம்விட்டு கலக்கி எழுத லாம்.

## விஷம் நீங்க மெழுகு

கோதுமைகொட்டை நீக்கிய பழம்புளி எலுமிச்சம் பழம் அளவு உருண்டையை எடுத்து நன்ருய் வளர்ந்திருக்கும் எட்டிமரத்தில் துளைசெய்து அதில் வைத்து மேலே மேற்படி மரத்தால் செய்த ஆப்படித்து ஒரு மண்டலஞ் சென்றபின் எடுத்து மாட்டுக்கொம்பு பரணையில் அடைத்து வைத்துக் கொண்டு, தேள் கருந்தேள் நண்டுதலைக்காய் செய்யான் பூரான் பூனை எலி பெருச்சாளி வண்டு ஓணன் முதலியவை கடித்தவருக்கு குண்டுமணி அளவு எடுத்து ஒரு வெற்றிலை யில் வைத்துக் கொடுக்க விஷம் நீங்கும் உப்பில்லாமல் மூன்றுநாள் பச்சரிசி கஞ்சி காய்ச்சிக் கொடுக்கவும். லாகிரி வஸ்துக்கள் உதவாது. கடும்பத்தியம்.

## காற்ருடி நூலுக்கு மாஞ்சா

தேத்தான் கொட்டை-4, வெள்ளை குண்டுமணி—25, சாளாம்பிசினி-1 கெச்சைக்காய் அளவு. சிறு நீர் முள்ளி விரை, துட்டெடை இவைகளில் தேத்தான் கொட்டையை பஞ்சுபோல் நருக்கிக்கொண்டு வெள்ளை குண்டுமணியின் தோலைப் போக்கி மற்ற இரண்டையுஞ் சேர்த்து ஒரு நாள் முன்னதாக கொஞ்சம் ஜலம்விட்டு ஊறவைத்து மறுநாள் அதிலுள்ள தண்ணீரை வொட்ட பிழிந்தெடுத்து அம்மியில் வைத்து அரைத்து வழித்தெடுத்து வைத்துக்கொண்டு, மைதாலக்கடிப்பட்டை கிளிகிளாம்பட்டை கடுக்காய்ப் பிஞ்சு கல்நாறு ருமஸ்திக் பேதாளு அஸர்லாஹூத் மொகடம்பூவு இந்த எட்டு தினுசும் வகை ஒன்றுக்கு கால்பலம் வீதம் நிறுத்து ஒன்ருய்க் கலந்து உரலில் போட்டு கெட்டைப்பாரையாலிடித்து வஸ்திரகாயஞ் செய்து காலணுயிட்டிலியில் 2 வாங்கி அதை மணையின்மீது வைத்து நன்ருய்ப் பிசைந்து அத்துடன் அரைத்து வைத்திருக்கும் சரக்கையும் வஸ்திரகாயஞ் செய்த தினுசையும் போட்டு மீராட்டிமாவு பிசைவதுபோல் மலாய்ந்து வாட்லோடு பொடி அரை ஆழாக்கு சேர்த்து மலாய்ந்து பிறகு லாம்பிளாக்குங் கலந்து கொண்டு மொத்தையர்க்கி வண்டி நூலில் பூசி நன்ருய்ப் பறக்கும்படியான காற்ருடியில் கட்டி காற்ருடி வாத்தியார் பேரைச் சொல்லி விட்டால் எதிரியின் காற்ருடியை அறுக்கும். விட்டவருக்கு நல்லபேர் கிடைக்கும்.

## திருட்டைக் கண்டுபிடிக்க

ஒரு வீட்டில் நகை நட்டு தட்டு முட்டுச் சாமான்கள் பணம் காசு முதலியவைகள் களவு போயிருந்தால் யார் மேல் சந்தேகமோ அவர்களுடன் மற்றவர்களையும் சேர்த்து

வைத்துக்கொண்டு, கடையில் விற்கும் பெரிய ஆட்டுக் கடாத் தலை ஒன்று வாங்கிவந்து நன்றுய்க் கழுவி மஞ்சள் பூசி குங்குமம் பெரிதாக முகம் நிறம்ப இட்டு ஒரு புது பானையை ஒரு அறைக்குள் கவிழ்த்து அதற்குமேல் தலையை வைத்து தலையின் வாயைத் திறந்து மறுபடியும் மூடவொட்டாமல் வைத்து அதன் நாக்கு முழுதும் பெருங்காயத்தை யரைத்து தேய்த்து விட்டு அந்த ஆட்டுத்தலையின் மேல் பதிவிளக்கொன்று புஷ்பஞ் சாற்றி கொளுத்தி ஸ்வத்து உள்ளே ஒருவரையும் இருக்கவொட்டாமல் எல்லாரும் வெளியே இருந்து ஒவ்வொருவராய் உள்ளே போய்ஷி ஆட்டின் நாக்கில் ஆள்காட்டிவிரலை ஊணி வைத்துவிட்டு வரச்சொல்லி களவு செய்தவர்களா யிருந்தால் அவர்கள் விரலை ஆட்டுக்கடா தன் பற்களால் கெட்டியாய்க் கடித்துக் கொள்ளுமென்றும் மற்றவர்களை ஒன்றுஞ் செய்யாதென்றுஞ் சொல்லி உள்ளே அனுப்பவும் அப்படியே அவர்கள் உள்ளே சென்று வெளியே வரும்போது அவரவர்கள் வி.ரல்களை வாசற்படியில் ஒருவர் மோந்து பார்த்துவிட்டு வந்தால் பயமில்லாது தலையின் நாக்கில் வைத்த விரல் பெருங்காய வாசனை வீசும் பயந்து நாக்கின்மேல் ஊணுதவர்கள் விரல் நாருது அந்த விரலுடையவர்கள் திருடினுர் என்று மிரட்டி தந்திரமாய் போக்குப் போன பொருளை வசப்படுத்திக் கொள்ளவும்.

## வேப்பிலையின் சக்தி

வேப்பமரத்தின் வாடையால் சுரம், தலைவலி, மயக்கம் இவைகள் நீங்கும். இதன் கொத்தைக் கொண்டு மந்திரிப்பதால் குழந்தைகளுக்குண்டாகும் சகல தோஷங்களும் விலகும். இதை அரைத்துப் பற்ருகப் போடுவதால் ஊர் சுற்றுகைகால் வெடிப்பு கணுக்களிலுண்டாகும் பிடிப்பு புட்டா

ளம்மை போகும். மென்று தின்பதால் தலை சுற்றி எகிரி எகிரி குதித்து தெய்வமாடுகிறவர்களுக்கும் கஞ்சா குடித்து தன்னை மறந்திருப்பவர்களுக்கும் ஆகாரமாகவும் மற்றவர் களுக்கு தேகாரோக்கியமாகவு மிருந்து வருகின்றது. இதன் குணாதிசயத்தாலே தான் ஐரோப்பியர் எக்காலத்தும் சுரவியாதி இருந்து கொண்டிருக்கிற தேசங்களில் இம் மரத்தை வைத்து வளர்த்து வருகிறார்கள். இதல்லாமல் இதன் பூவையும் கொட்டையையும் நெய்யையும் பற்றி வைத்திய சாஸ்திரத்தில் மிகவும் புகழ்ந்து பேசி யிருக் கின்றார்கள்.

இவைகளை ஓர் எடையாக எடுத்து தேனில் அரைத்து திலர்தமிட மிருக உச்சாடனமாகும்.

---

## 49. தேவ உச்சாடனம்

காக்கைகூண்டு
கழுதைப்புட்டை
தூரச்சீலை
துருசுசடை
சுடுகாட்டுச் சாம்பல்

இவையெல்லாம் ஒன்றுகச் சேர்த்து செய்ய தேவர்கள் உச்சாடனமாகும்.

---

## 50. விஷ உச்சாடனம்

மாவிலிங்கம்
விஷ்ணுகிரந்தி
நீர்மேல்நெருப்பு
நீலிவேர்
பாம்புபிச்சு
நாபி
நேர்வாளம்

இவைகளை சமமாகக்கூட்டி அரைத்து லங் மங் என்று லக்ஷம் உருஜெபித்து வைத்துக் கொள்ள விஷ உச்சாடனமாகும்.

## 51. ஸ்திரீ புருஷ உச்சாடனம்

| | |
|---|---|
| தேள்கொடுக்கிலை | தூரச்சீலை |
| திகைப்பூண்டு | பச்சோந்திமுதுகெலும்பு |
| கௌதும்பை | பூனைவணங்கி |

இவைகளைச் சேர்த்து செய்ய ஸ்திரீகளுக்குப் புருஷர்களும், புருஷர்களுக்கு ஸ்திரீகளும் உச்சாடனமாவார்கள்"

## 52. பிணி உச்சாடனம்

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கரந்தை |
| சித்திரமூலம் | சீந்தில் |
| மஞ்சள் | மிளகா |

இவைகளை ஒன்றுகச்சேர்க்க வியாதிகள் உச்சாடனமாகும்.

## 53. சர்வ உச்சாடனம்

| | |
|---|---|
| கோஷ்டம் | வெண்குறி |
| செங்கழுநீர் | கொன்றை |
| மாடப்புருவெச்சம் | விந்து |
| நகம் | |

இவைகளைக் கனிப்பழச் சாற்றுலரைத்து வைத்துக் கொண்டு.

| | |
|---|---|
| ஓம் பரிசினை | சித்திரரூபி |
| சிங் நங் | சித்திரரூபி |
| சிஷ்டபரிபாலினி | ரங் ரங் |
| வாங்கு வாங்கு | உருளு உருளு |
| ஓடு ஓடு | உங் உங் |
| எங் எங் | ஐயும் சுவாஹா |

என்று ஆயிரத்தெட்டு உருஜெபிக்க எத்தகைய பில்லி, சூனியம், ஏவல்களும் விலகும்.

## 54. ஸ்திரீ லேபனம்

பொன்னுவாரை விஷ்ணுகிரந்தி
வசம்பு

இவைகளை நல்லெண்ணெயிற் காய்ச்சி பூசிக்கலந்தால் பிரியமாட்டாள்.

## 55. வேறு ஸ்திரீ லேபனம்

குன்றிவிரை நீர்முள்ளிவிரை
அரிதாரம் கோஷ்டம்

இவைகளை சமயெடை எடுத்து முலைப்பாலில் அரைத்து ஸ்திரீயின் தலையில் தேய்த்துச் சேர எந்நாளும் பிரியமாட்டாள்.

## 56. வேறு

மாடன்முட்டை மனோசிலைகாந்தமும்
நீடுநீரின் நின்றுசிணுங்கியும்
ஆடையொட்டியு மப்பனுஞ் சேர்ந்திடில்
பாடையேறினும் பட்சமறவளே.

உரை :—மூக்கழுக்கு, அக்குள் அழுக்கு, காதழுக்கு, கண்பீளை, விந்துகூட்டிட எக்காலமும் உயிர் உள்ளவரையில் பிரியமாட்டாள்.

## இதற்கு மந்திரம்

அரி ஓம், லம்லம், சர்வம் வணங்கு, மாதங்கி, சிங்ஜ, மோகிமோகி, ஔவும், ஸ்ரீயும் நமநமா என்று ஆயிரத்

தெட்டு உருஜெபித்து பிறகு உபயோகப்படுத்த வேண்டும். அப்போதுதான் சித்தியாகும்.

## 57. இராஜ ஏடணை

காக்கைப்பூண்டு
கொல்லைக்கம்பு
லிங்கம்
கோஷ்டம்
கருங்குன்றி
நாகத்தின் ஊண்
அரிதாரம்

இவைகளைச் சேர்த்து மயான பூசனைசெய்ய இராஜ ஏடணையாகும்.

## 58. புருட ஏடணை

திருகுகள்ளி
செம்முள்ளி
கொழுஞ்சி
கோஷ்டம்
வெள்ளைகாக்கட்டான்
தகரை
ஆரை
சுக்கு

இவைகளை சமன்சேர்த்து செய்ய புருட ஏடணையாகும்.

## 59. ஸ்திரீ ஏடணை

சித்திரமூலம்
கோஷ்டம்
பூநீர்
தவளையூண்
ஆமணக்கு
வாழை
பாம்பூண்

இவைகளை சேர்த்து செய்ய ஸ்திரீ ஏடணையாகும்.

## 60. மிருக ஏடணை

பூனைக்காலி
அருகன்வேர்
இருவரையொட்டி
செங்கத்தாரி
கோரைக்கிழங்கு
காசோரி

இவைகளை சேர்த்துசெய்ய மிருக ஏடணையாகும்.

## 61. சர்வ ஏடணை

கொத்தான்
வண்ணை
வெள்ளை ஆமணக்கு
செம்போத்து எச்சம்
தாமரை நூல்
ஜாதிலிங்கம்
கொழுஞ்சி
புன்னை
கருங்கண்ணி
புருயிறகு
நாயூண்

இவைகளை யெல்லாம் சரியெடையாகஎடுத்து ஏடணை மந்திரத்தை சொல்லி உபயோகிக்க சர்வமும் ஏடணை யாகும்.

## 62. சர்வ வசியம்

தேனும்வெள்ளி ஞாயறதில்
திங்கள் வியாழம் நெய்யாகும்
பானும் செவ்வாய் புதன்பாலாம்
பகரு முடவன் நீராகும்
ஆலல் ஆவின் புல்லுருவி
அதிலே குழைத்துத் திலர்தமிட
வானோ ரெல்லாம் வசமாவார்
மண்ணில் சர்வ வசியமிதே.

உரை:—ஆல மரத்து புல்லுருவிக்கு காப்புகட்டிக் கொண்டுவந்து மோகன மந்திரத்தை லக்ஷமுருவு கொடுத்து, வெள்ளிக்கிழமை ஞாயிற்றுக்கிழமை தேனி லும், திங்கட்கிழமை வியாழக்கிழமை நெய்யிலும், செவ் வாய்க்கிழமை புதன்கிழமை காராவின் பாலிலும், சனிக் கிழமை நீரிலும் குழைத்து திலர்தமிட இப்பூவுலகில் சர்வ ஜனங்களும், விண்ணுலகத் தேவர்களும் வசியமாவார்கள்.

## 63. விந்து ஸ்தம்பனம்

தூளைவிட்டு இன்னமொன்று சொல்லக்கேளு
துலக்கமுள்ள பாளைவித் தெடுத்து வந்து
பாளையென்ற விந்துதா னிருத்தி வைக்கும்
பண்பான பூமி சர்க்கரையின் மூலம்
காளையென்ற பூனையுட காலி வித்தும்
கனிவாக வகைவகைக்கு விராகன் கொண்டு
ஆளவே யாவின்பால் தன்னு லாட்டி
அடைவாகப் பன்னிரண்டு நாள்தான் கொள்ளே.

கொள்ளவே யந்திசந்தி கொண்டபோது
கோடிபெண்ணை யணைந்தாலுங் கழிந்திடாது
தள்ளவே மற்றதுவுஞ் சொல்லக்கேளு
தயவாகத் தண்ணீரிற் கழுத்து மட்டும்
விள்ளவே நின்றக்கால் கெலிக்குந் தேகம்
விதமாக வெலுமிச்சம் பழத்தை யுண்ணு
அள்ளவே போகருட கடாக்ஷத்தாலே
அடைவாக புலிப்பாணி விளம்பினேனே.

உரை:—உலகோர் மெச்சும்படியான ஒன்று சொல்லுகிறேன் கேள். அதாவது ஆடுதின்னுப்பாளை விரையைக் கொண்டுவந்து விந்துவை நிறுத்தும்படியான குணமுடைய பூச்சக்கரக் கிழங்குக்கு (அதாவது பூமிசக்கரைக் கிழங்கு) பூனை காலிவிரை இவைகள் வகைக்கு இரண்டிரண்டு வராகனெடை எடுத்து பசும்பாலால் நன்றுயரைத்து பன்னிரண்டு நாள் வரைக்கும் இரண்டு வேளையும் சாப்பிட்டால் கோடி பெண்களைச் சேர்ந்தாலும் இந்திரியம் கழியாது, அதற்கு மாற்றுவது கழுத்துவரைக்கும் தண்ணீரிலிருந்து வரலாம். தவிர எலுமிச்சம் பழத்

தைச் சாப்பிட வேண்டும். ஆகையால் போக முனிவருடைய கிருபையினுல் புளிப்பாணியாகிய நான் சொன்னேன்.

## 64. தாது புஷ்டி

சந்தனம், தேற்ருன்கொட்டை, பூமிசக்கரைக்கிழங்கு, பூனேக்காலிவித்து முருங்கவேர்ப்பட்டை இவைகள் வகைக்கு இரண்டு வராகனெடை எடுத்துத் தேங்காய்ப் பாலில் அரைத்து சீனி சர்க்கரைச் சேர்த்து பன்னிரண்டு நாள் குடித்தால் வீரிய விர்த்தியாகும். சூடுகளெல்லாந் தணியும் தேகம் தேஜசடையும், ஸ்திரீபோகஞ் செய்தால் இவன் மன்மதனே என்றும் சொல்லுவார்கள்.

முதற்பாகம் முற்றிற்று.

---

உ

பராசத்தி துணை

# உயிர் மெய் எழுத்து

# மூலிகை ஜாலரத்தினம்

மூலமும் - உரையும்

## இரண்டாம் பாகம்

ஐம்பத்தோரட்சரம்

| | | | | |
|---|---|---|---|---|
| அ. ந. 9 | இ. ம. 11 | உ. சி. 4 | எ. வ. 12 | ஒ. ய. 15 |
| உ. சி. 12 | எ. வ. 15 | ஒ ய. 9 | அ. ந. 11 | இ. ம. 4 |
| ஒ. ய. 11 | அ. ந. 4 | இ. ம. 12 | உ. சி 15 | எ. வ. 9 |
| இ. ம. 15 | உ சி. 9 | எ. வ. 11 | ஒ. ய. 4 | அ. ந. 12 |
| எ. வ. 4 | ஒ ய. 12 | அ. ந. 15 | இ, ம. 9 | உ. சி. 11 |

## மாந்திரீகச் சிறப்பு

நகரமென்ற வெழுத்திஞல் நடனமாச்சு
மகரமென்ற வெழுத்திஞல் மங்கலாச்சு
சிகரமென்ற வெழுத்திஞல் சித்தியாச்சு
வகரமென்ற வெழுத்திஞல் வசியமாச்சு
யகரமென்ற வெழுத்திஞ லிதுக்கதுவுமாச்சு
யான்சொல்லி விட்டேனிவ் வுலகத்தோர்க்கே.

தம்பனமோகனம் சத்ருமாரணம்
கொம்பனவசியம் குறித்தஆக்ருஷணம்
விம்பெனவித்து வேஷணமாகிடும்
நம்புமுச்சாடன நவின்றபேதனம்.

இந்தச் சக்கரத்தைச் சுவர்ணம், வெள்ளி, அல்லது தாம்பர முதலிய தகட்டில் ஸ்தாபனம் செய்து, குருமுகாந் திரமாக உபதேசிக்கப் பெற்று, சுத்தமாகிய ஓர் அறையில் சுபதினமாகத் துவக்கி. ஷெ சக்கரத்திற்கு அபிஷேகம் செய்து, கதம்பகஸ்தூரி புஷ்ப பரிமளவர்க்கம்சாற்றி, சுத்த மாகிய பால் பழ முதலிய வஸ்துக்களைப் படைத்து, தான் ஆச்சாரசீலஞய் கிழக்கு முகமாகச் சுத்தாசனத்தில் அமர்ந்து ஆக்ஞைப்படி நாள் ஒன்றுக்கு ஆயிரத்தெட்டு உருவாக நாற்பத்தியெட்டுநாள் ஜெபித்துவர சித்தியாகும் இந்த மூலாதார ஞாஞனந்தம் சித்தியான பிறகு பின் சொல்லப் போகும் மார்க்கத்தில் ஈடுபட சர்வ காரியமும், யோகமும், ஞானமும், ஜாலமும் சித்தியாகும். முன்னது முடியாவிட்டால் முற்றும் முடியாதென்பது திண்ணம்.

பூஜாகாலத்தில் இரவி மதியை ஒன்ருய்க்கூட்டி, சுழி முனையில் மனநிலைமையோடு கும்பகத்தில் நடாத்துவதால் அஷ்டகர்மம் சித்தியாவதோடு மற்றெல்லாம் சித்தியாகும்.

## பஞ்சாட்சர பீஜம்

| ந | ம | சி | வ | ய |
|---|---|---|---|---|
| சவ்வும் | கிலியும் | ஐயும் | ஸ்ரீயும் | ஹ்ரியும் |

## ஜாலக்காள் வசிய சக்கரம்




தும்பைச் செடிக்கு வியாழக்கிழமை மஞ்சள் நூல் காப்புகட்டி, பொங்கலிட்டு. பலிகொடுத்து தூபதீபங் காட்டி. ஜாலக்காளை மனதிலெண்ணி, வேரைப்பிடுங்கி வந்து சக்கரத்தில் முன்னதாக வைத்து, அவ்வேருக்குப் பேதனமையும், ஐங்கோலக்கருவும் தடவி, சத்திபூஜை போட்டு, சாகினி டாகினி ஜாலக்காள் தேவி வாவா ஙீஙீ ருரு என்று லட்சம் உரு ஜெபித்து, குளிசமாடி கட்டிக் கொள்ள சர்வகாரியமும் சித்தியாவதோடு எவ்வித ஜாலங் களாட பலித முண்டாகும்.

## சாமளாதேவி பூஜா ஜால சக்கரம்




முல்லைச்செடிக்கு ஆதிவாரம் காப்புகட்டி பூசை போட்டு பலிகொடுத்து சாமளாதேவியை நினைத்து அதன் மேல் உச்சாடன மையும் ஐங்கோலக்கருவும் தடவி, மேற்படி சக்கரத்தை பூஜையில் வைத்து, ஓம் றீம், ஹ்ரீம் கிலீம் சவ்வும் சாமளாதேவி வாவா என்று ஆயிரத்தெட்டு உரு கொடுத்து குளிசமாடி கட்டிக்கொள்ள சகல ஜாலம் கை கூடும். அதோடு ஐங்கோலத் தைலமும் ஐங்காயமும் சேர்த்து குலிசமாட உள்ளங்கை நெல்லிக்கனிபோல் சர்வ காரியமும் சித்தியாகும்.

### ஐங்காயம்

வசம்பு, ஓமம், வெள்ளுள்ளி, கடுகு, பெருங்காயம் ஆக-5.

## உலோக வசியம்




இந்தச் சக்கரத்தை காரீயத்தகட்டில் ஸ்தாபனஞ் செய்து ஆதிவாரந் தொடங்கி நாற்பத்தியெட்டுநாள், ஆச் சாரத்துடன் சுத்த பூஜையாக அவல்-கடலை-பழம்-தேங் காய்-கர்ப்பூரம்-சாம்பிராணி-ஊதுவத்தி-வாசனை திரவியம் வைத்து,

ஓம் ஐயும் கிலியும் ஸ்ரீயும் சவ்வும் ரீம் கிலீம் ஓம் என்று லக்ஷம் உரு ஜெபிக்க க்ஷணத்திற்குள் சித்தியாகும்.

இதனுல் வறுமை விலகிப்போகும் அஷ்ட ஐஸ்வரியங் களும் உண்டாகும்.

மன்னர்கள், தேவதைகள், உலகத்தவர்கள் முதலான சகலமும் வசியமாகும்.

ஜாலம், வைத்தியம், வாதம், ஞானம் முதலானவை களுக்கும், அஷ்டகர்மங்களுக்கும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் கைகூடும்.

## அஷ்டகர்மத்திற்கு வாரங்கள்

| | |
|---|---|
| ஞாயிறு | வசியம் |
| திங்கள் | மோகனம் |
| செவ்வாய் | ஏடணை-பேதனம் |
| புதன் | தம்பனம் |
| வியாழம் | உச்சாடனம் |
| வெள்ளி | ஆக்ருஷணம் |
| சனி | மாரணம் |

## அஷ்ட கர்மங்களுக்கு திசை

| | |
|---|---|
| கிழக்கு | மோகனம் |
| தெற்கு | மாரணம் |
| மேற்கு | உச்சாடனம் |
| வடக்கு | பெதனம்-ஏடணை |
| தென்கிழக்கு | தம்பனம் |
| வாய்வு | ஆக்ருஷணம் |
| ஈசான்யம் | சர்வம் |

## அஷ்ட கர்மங்களுக்கு உயிரெழுத்து

| | |
|---|---|
| வசியம் | அகாரம் |
| உச்சாடனம் | தகாரம் |
| தம்பனம் | பகாரம் |
| பேதனம் | உகாரம் |

இவ்விதமாக அஷ்ட வர்க்கங்களையும் அறிந்து வகாரத்தில் அறிந்து பார்க்கில் சக்கரத்தில் அடைந்தது மூலமாகத் தோன்றும்.

---

## ஐங்கோலத் தைலம்

சகலமான ஜாலங்களையும் ஐங்கோலத்தைலமில்லாமல் படி விளையாட முடியாது அதைக் கூட்டும் விதம் எப்படி யெனில்:—கன்னியாஸ்திரீயைப் புதைக்குமிடத்தை அடையாளமாகப் பார்த்துக்கொண்டு இரண்டு மண்டலஞ் சென்றதும் ஓர் நாளைக்கு இராக்கால நடுச்சாம வேளையாகச் சென்று ஒருவரையுங்கூட வைத்துக்கொள்ளாது தனிமையாய் அவ்விடத்தை வெட்டி அங்கிருக்கும் ஷை ஸ்திரீயின் எலும்புகளை ஒன்றேனும் விடாது கொண்டு வந்து சுத்தஞ் செய்துக் காயவைத்துப் பிறகு அதைக் கல்லுரலில் போட்டு இடித்துத் தூளாக்கி அதனுடன் கல்லுப்பு, வழலையுப்பு ஐங்காலவுப்பு, அழிஞ்சிவிரை, பேய்ப் பீர்க்கன்விரை, புங்கம்விரை, நாக்குப்பூச்சி ஆக இவ்வேழு தினுசையும் வகைக்குப் பலம் பனிரெண்டாக நிறுத்தெடுத்து நன்றாக உலர்த்திப் பிறகு ஒரு புதிய பாண்டத்தில் ஐந்துபடி ஜலம்விட்டு அதில் மேற்படி சரக்கை யெல்லாம் போட்டு நான்கு ஜாமம் ஊறவைத்துப் பிறகு அச்சரக்கை யெல்லாம் எடுத்து சூரியனிழலில் நன்றாக காயவைத்துத் காயந்தவுடன் எல்லாவற்றையும் கல்லுரலில் போட்டு நன்றாகயிடித்துத்தூளாக்கி ஓர் பாண்டத்தில்போட்டு வாயைமூடி சீலைமண் செய்து பிறகு நாலுமுழமிருக்கும்படியாக ஓர்குழியைத் தோண்டி அக்குழி இரண்டு முழம் அடையும்படியாக சமாதி எருவைக் கொண்டுவந்து கொட்டி அதன் நடுவே இரண்டு ஜாணகலம் பள்ளஞ் செய்து அப்பள்ளத்தில் ஓர் புதிய குடுவையை வைத்து அதற்குமேல் ஷை பானையை மையமாகவைத்து அதற்கு மேல் மலப்புழுக்கை, குதிரையெருவு, மாட்டெருவு, ஆட்டெருவு, கரி, சுடுகாட்டுச் சாம்பல், இவ்வாறையுஞ் சமபாகமாகச் சேர்த்துக் கலக்கி அக்குழிக்குக் கொட்டி மூடின பிறகு அத்திமர விறகினால் மூன்றுஜாமம் வரையிலும், ஒரே

தீயாக் எரித்து நான்காவது ஜாமம் நெருப்பெல்லாம் ஆறின பிறகு குழியைத் தோண்டி மேலே வைத்திருக்கும் பாண்டத்தை நீக்கி அடியில் வைத்திருக்கும் குடுவையை யெடுத்தால் அதில் தைலமிறங்கி யிருக்கும். இதைத்தான் ஐங்கோலத் தைலமென்று சொல்லுகின்றது. அதை எடுத்து ஓர் புட்டியிலிட்டுப் பூசையில் வைத்து இஷ்ட தேவதையை நினைத்துப் பூசித்துப் பத்திரப்படுத்திக் கொண்டால் பிறகு நினைத்த ஜாலங்களை விளையாடிக் காண்பிக்கலாம். ஆனால் இதைக் குழித்தைலம் எப்படி இறக்குகின்றோமோ அப்படித்தான் இறக்க வேண்டுமென வறிக.

---

## அஷ்டமாசித்துத் தைலம்

கழுவிலேறி இறந்தவரை மனித நடமாட்ட மில்லாத யிடத்தில் புதைத்துவைத்து ஒரு மண்டலஞ் சென்றபிறகு அதைத் தோண்டி அவ்வெலும்பை யெல்லாஞ் சிதறாமல் கொண்டுவந்து அதிலிருக்கும் துர்நாற்றம் போகும்படி யாகக்கழுவி நன்றாக உலர்த்தி வைத்துக்கொண்டு, பிறகு காக்கை, மயில், கோழி, வல்லூரு, ஆந்தை, இந்த ஐந்து பட்சிகளையுங் கொண்டுவந்து ரோமங்களைப் போக்கி மனித சஞ்சாரமில்லாத யிடத்தில் நன்றாக உலர வைத்துப் பத்திரப்படுத்திக்கொண்டு பிறகு, தேவாங்கு, கருநாய், உழநரி, குரங்கு, கரும்பூனை, இவ்வைந்து ஜீவன்களின் பிச்சையு மெடுத்து முன்போலவே பத்திரமாகவே வுலர்த்தி வைத்துக் கொண்டதும், கல்லுரலில் மேற்சொல்லியவை களை யெல்லாம் போட்டு நன்றாகக் குமுங்க யிடித்துத் தூளாக்கி முன்மாதிரி குழிவெட்டிக் குடுவையை வைத்துக் குடுவைக்குக் கீழும் மேலும் ஆட்டெருவு, மாட்டெருவு சமாதி யெருவு, சுடுகாட்டுச் சாம்பல் இவைகளைச் சமபாக

மாகக் கலந்துக் கொட்டி ஒரு மண்டலம் அதாவது நாற்பது நாள் மூடிவைத்து அதன் பிறகு ஒரு ஜாதி விறகினுல் காலாக்கினியாக மூன்று ஜாம மெரித்து நான்காவது ஜாமம் ஆறின பிறகு குழியைத் தோண்டி குடுவையை யெடுத்துப் பார்க்க அதில் தைலமிரங்கி யிருக்கும் அத் தைலத்தை யெடுத்து அதனுடன் வழலைச்சுண்ணம் அரைப்பலம் போட்டு மத்தித்துப் புட்டியில் வைத்துக் கொள்ளவும் ஆனுல் இதையும் முன்போலவே குழிதைல முறையைப்போல் தான் செய்யவேண்டும்.

## இ ரு ளி

காணப்பா இருளியென்ற மூலிகைக்கு
கட்டுவாய்க் கன்னிநூல் மூன்ரும் வாரம்
ஏனப்பா தயங்காதே கொண்டுவந்து
எதிராக நத்தையென்ற சூரிதன்னை
தானப்பா வெள்ளியென்ற வாரந்தன்னில்
தூயவாகக் காப்பிட்டு எடுத்துவந்து
பூணப்பா குளிசமது வாடியேதான்
பூட்டுபல கருமங்கள் தீட்டுவாயே.

உரை :—மலைகளிலும் குன்றுகளிலும் இருக்கப்பட்ட இருளியென்ற மூலிகையைக் கண்டு பிடித்து மங்களவார தினங் காப்புகட்டி சாப நிவர்த்தி செய்து பொங்கலிட்டு கோழி பலி கொடுத்துக் கொண்டுவந்து பிறகு நத்தைச் சூரிக்குக் காப்புக்கட்டி சுக்கிரவாரம் சூரியோதயத்தில் சாப நிவர்த்தி செய்துகொண்டுவந்து இரண்டையுங் குளிசமாடி ஓர் செப்புத்தகட்டில் ஐம்பத்தோரட்சரத்தை வரைந்து

அதில் முன் குளிச்சத்தை வைத்துச் சுருட்டி, நூற்றி யெட்டு தரம் ஜெபித்து எடுத்து வைத்துக்கொள்ள சர்வ காரியமும் கைகூடும்.

---

## அப்பைக் கிழங்கு

அப்பையென்ற கிழங்குடனே பேயகத்தி
யாலமென்ற யோலம் விரையூமத்தை
தப்பின்றி நான்கையுமே கிரணமின்றி
தனிநிழலிலே யுலர்த்தி தூளதாக்கி
ஒப்புடனே யாணுக்கும் பெண்ணுக்குந்தான்
ஒவ்வொரு சிட்டிகையாய் போட்டபோது
எப்படிதா னெனக்குகதி யென்றேயோடும்
இதுபெரிய ஜாலமென்று யியம்புவாயே.

உரை :—அப்பைக்கிழங்கு, பேயகத்தி. பேயாலம் வேர், ஊமத்தைவிரை இந்நான்கையும் சூரிய கிரணம் படாது நிழலிலுலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்த வகைக்கு கழஞ்சு ஒன்ருக எடுத்துக்கொண்டு, காலிமாட்டுப் பசுவின் சாணத்தை உலர்த்திக் கொளுத்தி சாம்பலாக்கி அந்தச் சாம்பலை முன் தூளுக்குச் சரியெடை சேர்த்துக் கலந்து வைத்துக்கொண்டு தேவையானபோது, ஸ்திரீகளை யாகிலும் புருஷர்களையாகிலும் பேய் பிசாசு பூதம் இவைகள் பிடித்திருக்குமாகில் அவர்களை ஸ்நானம் செய்விக்காமலேயே எப்படி இருக்கிருர்களோ அப்படியே கொண்டுவந்து குந்தவைத்து, முதலிலேயே தயார் செய்திருக்கும் தூளில் ஒரு சிட்டிகை யெடுத்துக்கொண்டு, ஆஞ்சநேய மந்திரத்தையாகிலும் காளிதேளி மந்திரத்தை யாகிலும் உரு ஜெபித்து அவர்கள் சிரசின்மேல் மேற்படி தூளைப்போட, அவர்கள் தலைசுழட்டி ஆடுவதுமல்லாமல்

பயந்து நடுக்கத்தோடு வாயைப் பினத்திக்கொண்டு நான் போகிறேன்! நான் போகிறேன்!! அபயம்! அபயம்!! என்று கூச்சல் போடுவார்கள். இதுவுமன்றி நாம் வேண்டாமலேயே தானுகவே ஊரும் பேரும் சொல்லுவார்கள். அது சமயம் நாம் ஜாக்கிரதையாக முடியை அறுத்துக்கொண்டு கொஞ்சம் ஜலம் தெளிக்க மயக்கமானது நீங்கி பேய் ஓடிப் போய் சாதாரணமாக நம்மைப் போலாவார்கள். இது அனேக பூசாலி மந்திரவாதிகள் தெரிந்து செய்துகொண்டு பேய் பிடித்தவர்கட்கு மேற்சொன்னதுபோல் பேயோட்டி விட்டு, மந்திரத்தா லோட்டியதுபோல் சாமர்த்தியம் வல்லமை காட்டி பணம் பறித்து வருகிருர்கள். இது மந்திரமில்லாமல் தந்திரமே இதோடு ஐங்கோலக் கருவும், சேர்த்துக்கொண்டால் நடக்கும் விநோதங்கள் அதிக ஆச்சர்யமே

---

## இரத்தின புருஸ்

இரத்தினத்தி லிரத்தினமாம் ஜீவரத்தினம்
நலமான ரத்தின புருஸ் என்னுமூலி
உத்தமனே ரவிநாளில் தனதுபட்சி
ஓங்கியே யரசாக யிருக்கும்போது
சித்தரிட பதம்பணிந்து வுயிர்கொடுத்து
சிதையாமல் காப்புகட்டி பிடுங்கிவந்து
பத்திரமாய் குளிசமிட சர்வசித்துங்
பலிக்குமடா பார்த்துநீ யெண்ணுவாயே.

உரை :—இரத்தினபுருஸ் என்னுஞ் செடியைக் கண்டு பிடித்து ஆதிவாரம் தன்னுடையபட்சி அரசாக இருக்கும் போது செடிக்கு சாபநிவர்த்திசெய்து உயிர்கொடுத்து காப்புகட்டி எடுத்துவந்து வைத்துக்கொண்டால் அதனுல்

அநேக சித்துகள் கைகூடும். இதை சிலர் ஓரிதழ்த்தாமரை என்றும், சூரியகாந்தி யென்றுஞ் சொல்லுவார்கள்

நமது தேசத்து சாதாரண வைத்தியர்கள் இம் மூலிகையை மேகத்தினுல், உண்டாகும் வெள்ளை நோய்க்கு கொடுத்து குணப்படுத்துவார்கள்.

இந்த மூலிகை பிரதிதினம்காலையில் வேண்டியமட்டும் தின்று அதன்மேல் பசும்பால் சாப்பிட்டுவர சரீரத்திலுண்டாகும் உஷ்ணம் வயிற்றில் ரணம், சீதபேதி, மூலச்சூடு நீர் சுருக்கு, வெள்ளை முதலியவைகள் நீங்கி தேகபுஷ்டியும், இரத்த விருத்தியும், முகதேஜசும், வாலிபத் தன்மையும், வீரிய விருத்தியும், சந்தான செல்வமும் உண்டாகும்.

இரத்தின புருஸ், நிலப்பனங்கிழங்கு, பூச்சக்கரைக் கிழங்கு, பூனைக்காலி விரை, முள்ளிலவம் பிசின், சீரகம், ஏலரிசி, சுக்கு இதுகள் சரியெடை யெடுத்து தக்க தேன் நெய்கூட்டி லேகியமாகச்செய்து வைத்துக்கொண்டு காலை மாலை பத்தியமில்லாமல் சாப்பிட்டுவர சர்வநோய்களும் தீர்ந்து சதா வாலிபத்தன்மையாக விருப்பார்கள்.

---

சுவர்முள்ளங்கி

பாரப்பா சுவற்றினிட முள்ளங்கிக்கு
பாரினிலே புகழ்சொல்ல தரமோநம்மால்
யாரப்பா அறிவார்கள் இந்த சூட்சம்
அவனியோர் பிழைப்பதற்கு சொன்னேன்பாரு
நேரப்பா சார்வாங்கி அபிரேக்கிற்கு
நித்தநித்த மேயூர வைத்ததூளை
சீரப்பா சுண்ணும்பில் குழைத்துப்பூச
சுவரெலாம் பளபளென்று தோன்றுந்தானே.

உரை:—சுவர் முள்ளங்கி என்னும் செடியின் இலை யைப் பறித்துவந்து கசக்கி சார்பிழிந்தெடுத்து, அந்த சாற்றில் வெள்ளை அபிரேக்கை ஊறவைத்திருந்து மற்று நாள் காலையில் ஜலம் விட்டலம்பி, மறுபடியும் முன்போல் சாற்றில் ஒருநாள் ஊறவைத்து எடுத்து அலம்பினுல் அபி ரேக்கானது வெண்மையாகக் காணப்படும். அதை யெடுத்து நன்ருய் பொடியாக்கி வஸ்திரகாயஞ் செய்து சுண்ணும்பு நீரில்கலந்து வீட்டிற்கு வெள்ளையடித்துவிட்டு அது உலர்ந்த பிறகு அவ்வீட்டில் ஏதாவது ஒரு பிரகாச மாகிய விளக்கைக் கொளுத்தி வைத்துவிட்டால் பார்ப் பவர்கட்கு அவ்வீடு முழுவதும் மகா உன்னதமாகிய பள பளப்பும் ஜொலி ஜொலிப்பும் எத்தனையோ விளக்குகள் இருந்து பிரகாசிப்பது போலவும் ஆச்சரியத்தை யுண் டாக்கும்.

மேற்படி மூலிகைச் சாற்ருல் அபிரேக்கை நான்கு ஜாமம் அரைத்து கஜபுடம் போடவும், இதுபோல் நூற்றி யெட்டு புடம்போட அருமையாகிய சுன்னமாகும். அதை அரிசி பிரமாணம் ஒரு மண்டலம் சாப்பிட நீரொழுக்கு ரோகமும் மற்ற இதர ரோகமும் தீர்ந்து திடகாத்திர முண் டாகும்.

## பேய்மூலி

அமாவாசையும், அஸ்த நட்சத்திரமும், ஆதிவாரமுங் கூடிய தினத்தில், பேய்மூலி என்னும் மூலிகைக்குச் சாப நிவர்த்திசெய்து பொங்கல்-பலி-தூப-தீப-நைவேத்திய முத லியவைகளைக் கிரமங் தவருது நடத்தி மோகினி மந்திரத் தை லட்சத்தி யெட்டுரு வீதம் மறு ஆதிவாரம் வரையில் கொடுத்து வடக்கே போகும் வேரை பின்னப்படாது கொண்டு வந்து நிழலி லுலர்த்தித் தூளாக்கி வைத்துக் கொண்டு,

| | |
|---|---|
| ஆனைவணங்கி | தொட்டாற்சுருங்கி |
| அழுகண்ணி | நின்றுல்சுருங்கி |
| பூனைவணங்கி | பேய்ப்பிரண்டை |
| தொழுகண்ணி | முசுமுசுக்கை |
| புளிமடலை | நிலப்பனைவேர் |
| தலைச்சுருளி | சுழலாவாரை |
| நன்னாரி | பொற்றலைக்கையான் |
| தான்றி | சிவனார்வேம்பு |
| வெள்ளைத்தோன்றி | ஜாதிக்காய் |
| மலைகலக்கி | ஜாபத்திரி |
| தேள்கொடுக்கு | ஏலம் |
| வாகையிலை | லவங்கப்பட்டை |
| கருநாற்றம் | கஞ்சா |
| தமரத்தை | அதிமதுரம் |
| கருவூமத்தன் | நத்தைச்சூரிக்கொழுந்து |
| மருளூமத்தன் | லவங்கம் |
| வெள்ளூமத்தன் | சென்னாயுருவி |
| சிகப்பூமத்தன் | செம்முள்ளி |
| மலைதாங்கி | செங்குவளை |
| பனிதாங்கி | நல்லமஞ்சள் |
| நிலந்தாங்கி | சிற்றகத்தி |
| இரட்டைப்பிரமிட்டை | ஒத்தைப்பிரமட்டை |

இவைகளை யெல்லாம் வகை ஒன்றுக்கு ஒரு பலம் விழுக்காடு கொண்டு நிழலில் உலர்த்தி நன்றாக உலர்ந்த பிறகு கல்லுரலில் போட்டு இடித்துத் தூளாக்கி வைத்துக் கொண்டு, அதன் பிறகு இதிற் சொல்லி யிருக்கும் ஐங்கோலத் தைலத்தை விட்டரைத்து அரைக்கும்போது முன் தயாரித்த பேய் மூலிகையையும் இதிற் போட்டு ஜாமம்

நான்கு வரையிலும் மோகினி மந்திரத்தைச் ஜெபித்துக்கொண்டே அரைத்து சிமிளில் வைத்துக்கொண்டு திலர்தமிட ஸ்திரீவசியமாம். ஆனால் இதை அரைக்கும்போது சூரியகிராண மாயிருந்தால் மிகவும் நன்மை யென்று பெரியோர்களெல்லாம் சொல்லி யிருக்கின்றனர்.

---

## செந்நாயுருவி

செந்நா யுருவி செம்முள்ளி
சிவந்த கஞ்சா செங்குவளை
பொன்னாங் காணி மதிமயக்கி
போனார் தேடி வழிமரிப்பான்
கன்னார் புனுகு நன்மஞ்சள்
கருமை யோடு யிதுவெல்லாம்
சொன்னார் புருட வசியமெனத்
தொடுவள் திலர்தம் நெற்றியிலே.

உரை:—சிகப்பு நாயுருவி, சிகப்பு உள்ளி, சிகப்பு கஞ்சா, சிவப்பு குவளைப்பூ, பொன்னாங்கண்ணி, திகைப்பூண்டு, நாயுருவிப்பூண்டு, விஷ்ணுகிரந்தி, புனுகு, நல்ல மஞ்சள் சுழல்வண்டு இதுகளை யெல்லாம் ஓரிடையாக யெடுத்துப் பானையில் போட்டு மேல் மூடி சீலமண் செய்து ஒருமரத்து விறகினால் எரித்துக் குழித்தைலம் வாங்கி அதைப் பூஜையில் வைத்து முன்போலவே மோகினி மந்திரத்தை விடாது அந்தி சந்தி துதிக்கையிலிருந்து பௌர்ணமி வரையில் ஜெபித்துப் பிறகு நெற்றியில் திலர்தமிட்டுக் கொண்டு வர புருட வசியமாகும்.

---

## வி ல் வ ம்

ஆதிவாரத்தில் வில்வமரத்திற்கு மஞ்சள் நூல் காப்பு கட்டி பொங்கலிட்டு வேரை அருது பிடுங்கிவந்து ஐங் கோலக் கருவைத் தடவி பூசையில் வைத்து ஓம், ஸ்ரீரீம், ரீம் ஐயும், கிலியும், சௌவும் சுவாகா வென்று நாள் ஒன் றுக்கு லட்ச முரு விழுக்காடு இருபத்தொருநாள் ஜெபித்து இருபத்திரண்டாவது நாள் அபிடேக முதலியவைகளைச் செய்து பணிய விநாயகர் வசியமாவார்.

## கொ ன் றை

சுக்கிர வாரத்தில் முன் செய்ததைப்போல் கொன்றை மரத்திற்குச் செய்து வேரருது கொண்டுவந்து பூசையில் வைத்து ஓம், ஐயும், கிலியும் சௌவும் சரஹணபவா வென்று முன்போலவே ஜெபித்துக் குளிசமாடி கட்டிக் கொள்ள சுப்பிரமணியர் வசியமாவார்.

## அ ர ச ன்

ஆதிவாரத்தில் அரசமரத்திற்கு முன்போலவே செய்ய வேண்டியதைச் செய்து வேரை அருது கொண்டுவந்து குளிசமாடிக் கட்டிக்கொள்ள திரிமூர்த்திகளும் வசியமாகி நினைத்த காரியத்தை முடிப்பார்கள்.

## ம ஞ் ச ள்

சுக்கிரவாரத்தில் மஞ்சள் செடிக்கு மஞ்சள் நூல் காப்பு கட்டி பொங்கலிட்டு வேரை அருது கொண்டுவந்து அதின் மேல் ஐங்கோலக் கருவைத்தடவி பூஜையில் வைத்து தேவர்களைத் தியானித்துப் பூசித்துக் குளிசமாடி கட்டிக் கொள்ள தேவர்கள் வசியமாகி நினைத்த வரத்தைக்கொடுப் பார்கள்.

## அ ரு க ம் பு ல்

சுக்கிரவாரத்தில் முன்மாதிரியே அருகம்புல்லுக்குச் செய்து குளிசமாடி அட்டதிக்குப் பாலகரை நினைத்துக் கட்டிக்கொள்ள நினைத்த காரியஞ் சித்தியாகும்.

## செம்முருங்கை

செம்முருங்கைச் செடிக்கு ஆதிவாரம் சூரியோதயத்தில் மஞ்சநூல் காப்புகட்டி வேரை அருது கொண்டுவந்து அதன்மேல் ஐங்கோலக் கருவைப்பூசி, பூசையில் வைத்துப் பூசித்துக் குளிசமாடிப் பத்தாவதுநாள் சூரியனை நினைத்துக் கட்டிக்கொள்ள சூரியன் வசியமாவார்.

## வேறு - மஞ்சள்

திங்கட்கிழமைதினம் ஷை செடிக்கு முன்போலவே பயபக்தியுடன் பூசை முதலிய வைபவத்துடன் காப்புகட்டி மறு திங்கட்கிழமை தினம் சென்று பொங்கலிட்டுவேரருது கொண்டுவந்து குளிசமாடி கட்டிக்கொள்ள சந்திரன் வசியமாம்.

## சிவனார்வேம்பு

செவ்வாய்க்கிழமைதினம் சிவனார்வேம்பு செடிக்கு முன் மாதிரி சகல வேலைகளையுஞ் செய்துக் குளிசமாடிக் கட்டிக் கொள்ள செவ்வாய் வசியமாவார். ஆனால் பூசை செய்யும் போது அந்தந்த தேவதையைத் தியானித்துப் பூசை செய்வதுடன் ஒவ்வொரு குளிசத்தின்மேலும் ஐங்கோலக் கருவைப் பூசிக் குளிசமாட வேண்டும்.

## இருவேலி

புதன்கிழமையதினம் இருவேலிச்செடிக்கு முன்போலக் காப்புக்கட்டி புதன்கிழமையதினமே வேரைப் பிடுங்கி குளிசமாடி கட்டிக்கொள்ள புதன் வசியமாவார்.

## செங்கழுநீர்

வியாழக்கிழமையதினம் மேற்படி செடிக்கு பலியுடன் பொங்கலிட்டு மஞ்சள் நூல் காப்புக்கட்டி மறுவாரஞ் சென்று வேரைப் பிடுங்கிவந்துக் குளிசமாடி ஐங்கோலங் தடவி பூசையில்வைத்துப் பூசித்து கட்டிக்கொள்ள வியாழன் வசியமாம்.

## கருஊமத்தன்

சுக்கிரவாரம் கருஊமத்தன் செடிக்கு முன்மாதிரி• பலியுடன் சகல பூசைகளேயுஞ் செய்து வேரைக் கொண்டு வந்து மறு சுக்கிரவாரம்வரை பூசையில்வைத்துப் பூசித்துக் குளிசமாடிக் கட்டிக்கொள்ள சுக்கிரன் வசியமாம்.

## செவ்வலரி

சனிக்கிழமையதினம் செவ்வலரிச் செடிக்கு மஞ்சள் நூல் காப்புக்கட்டி முன்போல் பூசித்து மறுவாரம் குளிசமாடிக் கட்டிக்கொள்ள சனி வசியமாகி சகல காரியமுங் கைகூடும்.

## எட்டிமரம்

அமாவாசையதினம் எட்டிமரத்திற்கு மஞ்சள் நூல் காப்புக்கட்டி பொங்கல், பலி, தூப, தீப, நைவேத்திய முதலியதுகளேச் செய்து பூசித்து ஒன்பதாவது நாள் வேரை அறுது பிடுங்கிக் குளிசமாடிக் கட்டிக்கொள்ள இராகு வசியமாவார்

## வேப்பமரம்

சூரிய கிரணத்தில் வேப்பமரத்திற்கு முன்போலவே செய்வதுடன் ஒன்பதுநாளும் அந்திசந்தி இடைவிடாது பூசித்து வேரைக் குளிசமாடிக் கட்டிக்கொள்ள கேது வசியமாகும்.

## குன்றிமணி

செவ்வாய்க்கிழமை தினம் குன்றிமணிச் செடிக்கு மஞ்சள் நூல் காப்புகட்டி பொங்கலிட்டு வேரை அருது கொண்டுவந்து குளிசமாடிப் பூசையில் வைத்து ஒன்பது நாள் வரைக்கும் காளி மந்திரத்தைச் செபித்துக் கட்டிக் கொள்ள காளி வசியமாம்.

## கருவூமத்தன்

ஆதிவாரமும் அமாவாசையும் கூடிய தினத்தில் கரு வூமத்தன் செடிக்குப் பொங்கலிட்டுப் பலிகொடுத்து மஞ் சள் நூல் காப்புகட்டி மறு ஆதிவாரம் வரைக்கும் துர்க்கை மந்திரத்தை தினமொன்றுக்கு லட்சமுரு ஜெபித்து வேரை அருது கொண்டுவந்து அதன்மேல் ஐங்கோலக் கருவும், அட்டமாசித்தி மையுந் தடவி குளிசமாடித் துர்க்கையைத் துதித்து கட்டிக்கொள்ள துர்க்கை வசியமாவதுடன் நினைத்த காரியமும் கைகூடும்.

## வேலிப்பருத்தி

பருவத்தில் வேலிப்பருத்திச் செடிக்கு முன்போல் சகல வேலைகளையுஞ் செய்து குளிசமாடிக் கட்டிக்கொள்ள மலை சாமுண்டீஸ்வரி வசியமாம்.

## பிரமதண்டி

மங்களவாரத்தில் பிரமதண்டிக்கு முன்மாதிரி சகல வேலைகளையுஞ் செய்து குளிசமாடிக் கட்டிக்கொள்ள மலை யாள பகவதி வசிய்மாவாள்.

## முல்லை

முல்லைச்செடிக்கு ஆதிவாரம் அந்திவேளையில் முன் மாதிரி பொங்கல் பலி முதலிய பூசைகளைச் செய்து வேர்

அருது பிடுங்கிவந்து குளிசமாடி ஐங்கோலமும், அட்டமா சித்தி மையும் தடவி கட்டிக்கொள்ள சாமளாதேவி வசிய மாகி சகல காரியமும் கைகூடும்.

## செண்பகம்

வெள்ளிக்கிழமைதினம் செண்பகச் செடிக்கு மஞ்சள் நூல் காப்புகட்டி பொங்கல் பலி முதலியதுடன் வேரருமல் கொண்டுவந்து கருவைத்தடவி பூசையில் வைத்து மறு வெள்ளிக்கிழமை வரைக்கும் தினமொன்றுக்கு லட்சமுரு விழுக்காடு கொடுத்துக் குளிசமாடி கட்டிக்கொள்ள * சரஸ் வதி வசியமாகி சகல காரியங்களும் கைகூடுவதுடன் பாடுந் திறமையு முண்டாகும்.

## தும்பை

தும்பைச் செடிக்கு வியாழக்கிழமை தினம் முன் செய்ததைப்போலவே செய்து பூசித்து வேரை யெடுத்துக் குளிசமாடி கட்டிக்கொள்ள ஜாலக்காள் வசியமாவாள்.

## (இதுவுமது)

ஞாயிற்றுக்கிழமையதினம் அமாவாசையாகப்பார்த்து பொங்கல், பலி தூபதீப நைவேத்திய பணிவிடைகளை கிரமந் தவருது ஷை தும்பைச் செடிக்குச் செய்து வடக்கே போகும்வேரை நுனி வேரருமல் கொண்டுவந்து அதன் மேல் ஐங்கோல மையும், அட்டமாசித்து மையுந் தடவி குளிசமாடி மலையாள பகவதி மந்திரத்தைச் செபித்துக் கட்டிக்கொள்ள ஜாலக்காள் வசியமாவாள்.

## தைவேளை

முன்மாதிரியே தைவேளைச் செடிக்குச் செய்து குளிச மாடி ஐங்கோலத் தைலந் தடவி அதனுடன் தம்பனக் கரு

வைத் தடவி குளிசமாடி காளிகாதேவி மந்திரத்தை ஆயி ரட்டெட்டுரு செபித்துக் கட்டிக்கொள்ள மயான ருத்திரி வசியமாவாள்.

## நிண்ணுசுருங்கி

நிண்ணுசுருங்கி செடிக்கு ஞாயிற்றுக்கிழமை தினம் கன்னிநூல் காப்புகட்டி, பொங்கல் பலி முதலியன செய்து குளிசமாடி ஐங்கோலந்தடவி கட்டிக்கொள்ள சக்கலாதேவி வசியமாவாள்.

## சிவனூர் வேம்பு வேர்

சித்திராபர்வந் தன்னிற் சிவபிரான் மூலிகைக்கு
உத்தமபுட்பஞ்சாத்தி யோங்கிடுஞ்சூடமேற்றி
முத்தியநீலகண்டா முற்றிலுநீகாவென்று
உத்தரவேரிலேதா னோராழியணிந்துகொள்ளே.

உரை:—சித்திரை மாதத்துப் பௌர்ணமியில் சிவனூர் வேம்பு என்னும் மூலிகைக்குப் பத்திர புஷ்பஞ்சாற்றி கர்ப் பூர தீபங்காட்டி சுவாமி நீலகண்டரே நான் நினைத்தவைக ளெல்லாம் கைகூட வரந் தரவேண்டுமென்று தியானித்து வடவேரை யெடுத்துக் கணையாழிக்குள்ளாகிலும் கடயத்தி லாகிலும் நுழைத்து அணிந்துகொண்டால் நாட்பட்ட கரு மேகம், செம்மேகம், கடை முதலிய கர்ம சர்ம வியாதிகள் நாளாவட்டத்தில் நீங்கும்.

---

## மோகனம்

அஷ்டமாசித்து

| | | | | |
|---|---|---|---|---|
| ம | சி | வ | ய | ந |
| சி | வ | ய | ந | ம |
| வ | ய | ந | ம | சி |
| ய | ந | ம | சி | வ |
| ந | ம | சி | வ | ய |

உ-ஸ்ரீ ஸ்ரீ ஓம் மா ஸ்ரீ

ஆதிவாரத்தில் அசுவனி சஷ்டி மிதுனராசியும்மோகன [மாகும்

பரணியும் ஏகாதசியும் கடகராசியும் ஸ்தம்பனமாகும்.

கிர்த்திகைதுதிகை சிங்கராசியும் வித்துவேஷணமாகும்.

ரோகணி கன்னியாராசியும் பேதனமாகும்.

மிருகசீரிடம் துவாதசி திரிதிகை விருச்சிக ராசியும் மாரணமாகும்.

புனர்பூசம் அஷ்டமி தனுசுராசியும் மோகனமாகும்.

பூசம் திரயோதசி மகரராசியும் ஆக்ருஷணமாகும்.

ஆயில்யம் திரிதியை கும்பராசியும் மோகனமாகும்.

மகம் நவமி மீனராசியும் ஸ்தம்பனமாகும்.

பூரம் அமாவாசை மேஷவிராசியும் வித்துவேஷணமாகும்.

உத்திரம் பஞ்சமி ரிஷபராசியும் மோகனமாகும்.

அஸ்தம் தசமி மிதுனராசியும் உச்சாடனமாகும்.

சித்திரை அமாவாசை கடகராசியும் மாரணமாகும்.

சுவாதி சஷ்டி சிங்கவிராசியும் வசியமாகும்.

விசாகம் பிரதமை கடகவிராசியும் மாரணமாகும்.

அனுஷம் சஷ்டி சிங்கவிராசியும் வசியமாகும்.

கேட்டை ஏகாதசி கன்னியா ராசியும் ஆக்ருஷணமாகும்.
மூலம் துதிகை துலாவிராசியும் மோகனமாகும்.
பூராடம் சப்தமி விருச்சிக ராசியும் ஸ்தம்பனமாகும்.
உத்திராடம் துவாதசி தனுசுராசியும் வித்துவேஷண மாகும்.
திருவோணம் திரிதிகை மகரராசியும் பேதனமாகும்.
அவிட்டம் அஷ்டமி கும்பராசியும் உச்சாடனமாகும்.
சதயம் சதுர்த்தி மேஷராசியும் வசியமாகும்.
பூரட்டாதி நவமி கடகவிராசியும் ஆக்ருஷணமாகும்.
ரேவதி சதுர்த்தி மிதுனராசியும் மோகனமாகும்.

இவைகளை யடுத்து அஷ்டமாசித்துஜாலம் வேடிக்கை முதலியவை செய்ய சித்தியாகும்.

---

## ஸ்தம்பனம்

அஷ்டமாசித்து

| | | | | |
|---|---|---|---|---|
| ந | ம | சி | வ | ய |
| சி | வ | ய | ந | ம |
| ய | ந | ம | சி | வ |
| ம | சி | வ | ய | ந |
| வ | ய | ந | ம | சி |

[illegible]

சோமவாரத்தில் அசுவனி பஞ்சமி கடகவிராசியும் ஸ்தம்பனமாகும்.
பரணி நவமி சிங்கவிராசியும் வித்வேஷ்ணமாகும்.
கிருத்திகை அமாவாசை கன்னியாராசியும் பேதனமாகும்.

ரோகணி பிரதமை துலாராசியும் உச்சாடனமாகும்.
மிருகசீரிடம் சஷ்டி விருச்சிகராசியும் மாரணமாகும்.
திருவாதிரை ஏகாதசி தனுசுராசியும் வசியமாகும்.
புனர்பூசம் துதிகை மகரராசியும் ஆக்ருஷணமாகும்.
பூசம் சப்தமி கும்பராசியும் மோகனமாகும்.
ஆயில்யம் துவாதசி மீனவிராசியும் ஸ்தம்பனமாகும்.
புனர்பூசம் திரிதியை மேஷராசியும் வித்துவேஷணமாகும்.
பூரம் அஷ்டமி ரிஷபராசியும் பேதனமாகும்.
உத்ரம் திரயோதசி மிதுனராசியும் உச்சாடனமாகும்.
அஸ்தம் சதுர்த்தசி கடகராசியும் மாரணமாகும்.
சுவாதி நவமி சிங்கவிராசியும் வசியமாகும்.
சித்திரை சதுர்த்தசி கன்னியாராசியும் ஆக்ருஷணமாகும்.
விசாகம் பஞ்சமி துலாராசியும் மோகனமாகும்.
அனுஷம் தசமி மீனராசியும் ஸ்தம்பனமாகும்.
கேட்டைஅமாவாசை தனுசுராசியும் வித்துவேஷணமாகும்.
மூலம் பிரதமை மகரராசியும் பேதனமாகும்.
பூராடம் சஷ்டி கும்பராசியும் உச்சாடனமாகும்.
திருவோணம் ஏகாதசி மீனவிராசியும் மாரணமாகும்.
திருவோணம் திரிதியை மேடராசியும் வசியமாகும்.
அவிட்டம் சப்தமி ரிஷபராசியும் ஆக்ருஷணமாகும்.
உத்திரட்டாதி துவாதசி மீனராசியும் மோகனமாகும்.
ரேவதி திரிதியை கடகவிராசியும் ஸ்தம்பனமாகும்.
பூரட்டாதி அஷ்டமி சிங்கவிராசியும் பேதனமாகும்.

இவ்விதமறிந்து யாதொரு வித்தையும் உண்டாகும்.

---

## உச்சாடனம்

அஷ்டமாசித்தி

| | | | | |
|---|---|---|---|---|
| வ | ய | ந | ம | சி |
| ந | ம | சி | வ | ய |
| சி | வ | ய | ந | ம |
| ய | ந | ம | சி | வ |
| ம | சி | வ | ய | ந |

ஓம் ரூ ஓரூ

மங்களவாரத்தில் அஸ்வனி சதுர்த்தசி துலாராசியும் உச்சாடனமாகும்.
பரணி நவமி விருச்சிகராசியும் மாரணமாகும்.
கிருத்திகை சதுர்த்தசி தனுசுராசியும் வசியமாகும்.
ரோகணி பஞ்சமி மகரராசியும் ஆக்ருஷணமாகும்.
மிருகசீரிடம் தசமி கும்பராசியும் மோகனமாகும்.
திருவாதிரை அமாவாசை மீனராசியும் தம்பனமாகும்.
பூசம் சஷ்டி ரிஷபராசியும் பேதனமாகும்.
ஆயில்யம் ஏகாதசி மிதுனராசியும் உச்சாடனமாகும்.
மகம் துதிகை கடகராசியும் மாரணமாகும்.
பூசம் சப்தமி சிங்கவிராசியும் வசியமாகும்.
உத்திரம் துவாதசி கன்னியாராசியும் ஆக்ருஷணமாகும்.
அஸ்தம் திரிதிகை துலாராசியும் மோகனமாகும்.
சோதி அஷ்டமி விருச்சிகராசியும் ஸ்தம்பனமாகும்.
சித்திரை திரயோதசி தனுசுராசியும் வித்துவேஷணமாகும்.
விசாகம் சதுர்த்தசி தனுசுராசியும் மாரணமாகும்.
அனுஷம் நவமி கும்பராசியும் உச்சாடனமாகும்.
கேட்டை சதுர்த்தசி மீனராசியும் மாரணமாகும்.

மூலம்பஞ்சமி ரிஷபராசியும் மேடராசியும் வசியமாகும்.
பூராடம் தசமி ரிஷபராசியும் ஆக்ருஷணமாகும்
உத்திராடம் அமாவாசை மிதுனராசியும் மோகனமாகும்.
திருவோணம் பிரதமை கடகராசியும் ஸ்தம்பனமாகும்.
அவிட்டம் சஷ்டி சிங்கவிராசியும் வித்துவேஷணமாகும்.
உத்திரட்டாதி ஏகாதசி கன்னியாராசியும் பேதனமாகும்.
துலாம் மிதுனராசி உச்சாடனமாகும்.
பூரட்டாதி சப்தமி விருச்சிகராசியும் மாரணமாகும்.
ரேவதி துவாதசி கடகராசியும் வசியமாகும்.

இவ்விதமறிந்து யாதொரு காரியம் முடிக்கவும் ஜெயமுண்டாகும்.

## ஆக்ருஷணம்

*அஷ்டமாசித்து*

| | | | | |
|---|---|---|---|---|
| வ | சி | ம | ந | ய |
| சி | ம | ந | ய | வ |
| ம | ந | ய | வ | சி |
| ந | ய | வ | சி | ம |
| ய | வ | சி | ம | ந |

*உ—வ ஸ்ரீ ஓம் மா[illegible]*

புதவாரத்தில் அசுவனி திரிதிகை மகரவிராசியும் ஆக்ருஷணமாகும்.
பரணி அஷ்டமி நவமி கும்பராசியும் மோகனமாகும்.
கிருத்திகை திரயோதசி மீனராசியும் ஸ்தம்பனமாகும்.
ரோகணி சதுர்த்தி மேஷவிராசியும் வித்துவேஷணமாகும்.

மிருகசீரிடம் நவமி ரிஷபராசியும் பேதனமாகும்.
திருவாதிரை சதுர்த்தி மிதுனராசியும் உச்சாடனமாகும்.
புனர்பூசம் பஞ்சமி கடகராசியும் மாரணமாகும்.
பூசம் தசமி சிங்கராசியும் வசியமாகும்.
ஆயில்யம் அமாவாசை கன்னியாராசியும் ஆக்ருஷண மாகும்.
மகம் பிரதமை துலாராசியும் மோகனமாகும்.
பூரம் சஷ்டி விருச்சிகராசியும் ஸ்தம்பனமாகும்.
உத்திரம் ஏகாதசி தனுசுராசியும் வித்துவேஷணமாகும்.
அஸ்தம் துதிகை மகரராசியும் பேதனமாகும்.
சுவாதி சப்தமி கும்பராசியும் உச்சாடனமாகும்.
சித்திரை துவாதசி மீனராசியும் மாரணமாகும்.
விசாகம் திரிதிகை மேஷராசியும் வசியமாகும்.
அனுஷம் அஷ்டமி ரிஷபராசியும் வசியமாகும்.
அனுஷம் அஷ்டமி ரிஷபராசியும் ஆக்ருஷணமாகும்.
கேட்டை திரயோதசி மிதுனராசியும் மோகனமாகும்.
மூலம் சதுர்த்தி கடகராசியும் ஸ்தம்பனமாகும்.
பூராடம் நவமி சிங்கராசியும் வித்துவேஷணமாகும்.
உத்திராடம் சதுர்த்தி கன்னியாராசியும் பேதனமாகும்.
திருவோணம் பஞ்சமி துலாராசியும் உச்சாடனமாகும்.
அவிட்டம் தசமி விருச்சிகராசியும் மாரணமாகும்.
உத்திரட்டாதி சஷ்டி கும்பராசியும் மோகனமாகும்.
ரேவதி ஏகாதசி மீனராசியும் ஸ்தம்பனமாகும்.

இதுபோல் நட்சத்திரம் திதி ராசி வாரத்துடன் செய்யில் தடையில்லாமல் பலிக்கும்.

---

## வித்துவேஷணம்

அஷ்டமாசித்தி

| | | | | |
|---|---|---|---|---|
| ந | ய | வ | சி | ம |
| சி | ம | ந | ய | வ |
| ய | வ | சி | ம | ந |
| ம | ந | ய | வ | சி |
| வ | சி | ம | ந | ய |

4-வது

குருவாரத்தில் அசுவனி துதிகை மேஷராசியும் வித்துவேஷணமாகும்.
பரணி சப்தமி ரிஷபராசியும் பேதனமாகும்.
கிருத்திகை துவாதசி மிதுனராசியும் உச்சாடனமாகும்.
உத்திரம் அமாவாசை மீனராசியும் மாரணமாகும்.
அஸ்தம் பிரதமை மேடராசியும் வசியமாகும்.
சுவாதி சஷ்டி ரிஷபராசியும் வசியமாகும்.
சித்திரை ஏகாதசி மிதுனராசியும் மோகனமாகும்.
விசாகம் துதிகை கடகராசியும் ஸ்தம்பனமாகும்.
அனுஷம் சப்தமி சிங்கராசியும் வித்துவேஷணமாகும்.
மூலம் திரிதியை துலாராசியும் பேதனமாகும்.
உத்திராடம் திரயோதசி தனுசுராசியும் வசியமாகும்.
திருவோணம் சதுர்த்தி மகரராசியும் ஆக்ருஷணமாகும்.
அவிட்டம் நவமி கும்பவிராசியும் மோகனமாகும்.
உத்திரட்டாதி சதுர்த்தி மீனராசியும் ஸ்தம்பனமாகும்.
சதயம் பஞ்சமி மேஷவிராசியும் வித்துவேஷணமாகும்.
ரேவதி அமாவாசை மித்துனராசியும் உச்சாடனமாகும்.

இவ்விதமறிந்து எவ்வித்தையும் செய்யும் ஜெயமாகும்.

---

## மாரணம்

அஷ்டமாசித்து

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம |
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |
| ய | ந | ம | சி | வ |
| வ | ய | ந | ம | சி |

ஓம் ஹ்ரீம் ஜூம்

சுக்கிரவாரம் அசுவனிபிரதமை கடகவிராசியும் மாரண மாகும்.
பரணி சஷ்டி சிங்கராசியும் வசியமாகும்.
கிருத்திகை ஏகாதசி கன்யாராசியும் ஆக்ருஷணமாகும்.
ரேவதி துதிகை துலாராசியும் மோகனமாகும்.
மிருகசீரிடமும் சப்தமியும் விருச்சிகராசியும் ஸ்தம்பன மாகும்.
திருவாதிரை துவாதசி தனுசு விருச்சிகராசியும் பேதன மாகும்.
பூசம் அஷ்டமி கும்பராசியும் வசியமாகும்.
பூசம் நவமி ரிஷபராசியும் ஆக்ருஷணமாகும்.
உத்திரம் சதுர்த்தசி மிதுனராசியும் மோகனமாகும்.
அஸ்தம் பஞ்சமி கடகராசியும் ஸ்தம்பனமாகும்.
சுவாதி தசமி சிங்கவிராசியும் வித்துவேஷணமாகும்.
சித்திரை அமாவாசை கன்யாராசியும் ஸ்தம்பனமாகும்.
விசாகம் பிரதமை துலாராசியும் உச்சாடனமாகும்
அனுஷம் சஷ்டி விருச்சிகராசியும் மாரணமாகும்.
கேட்டை ஏகாதசி தனுசு ராசியும் ஆக்ருஷணமாகும்.
பூராடம் சப்தமி கும்பராசியும் மீனராசியும் ஸ்தம்பனமாகும்
திருவோணம்திரிதியை மேஷராசியும்வித்துவேஷணமாகும்

சதயம் திரயோதசி மிதுனராசியும் உச்சாடனமாகும்.
பூரட்டாதி சதுர்த்தி கடகராசியும் மாரணமாகும்.
உத்திரட்டாதி நவமி சிங்கராசியும் வசியமாகும்.
ரேவதி சதுர்த்தசி கன்யாராசியும் ஆக்ருஷணமாகும்.

இந்த வித்தைகள் கண்டு அஷ்டமாசித்தும் ஜாலமும் மற்றதும் செய்யவேண்டும்.

---

**வசியம்**

| | | | | |
|---|---|---|---|---|
| ய | ந | ம | சி | வ |
| ம | சி | வ | ய | ந |
| வ | ய | ந | ம | சி |
| ந | ம | சி | வ | ய |
| சி | வ | ய | ந | ம |

**பேதனம்**

| | | | | |
|---|---|---|---|---|
| ய | வ | சி | ம | ந |
| சி | ம | ந | ய | வ |
| ந | ய | வ | சி | ம |
| வ | சி | ம | ந | ய |
| ம | ந | ய | வ | சி |

சனிவாரத்தில் அசுவனி பஞ்சமி துலாவிராசியும் மோகனமாகும்.
பரணி தசமி விருச்சிகராசியும் ஸ்தம்பனமாகும்.
கிருத்திகை அமாவாசை தனுசுராசியும் வித்துவேஷணமாகும்.
சதயம் திரியோதசி மிதுனராசியும் பேதனமாகும்.
மிருகசீரிடம் சஷ்டி கும்பராசியும் உச்சாடனமாகும்.
திருவாதிரை ஏகாதசி மீனராசியும் மாரணமாகும்.
புனர்பூசம் துதிகை மேஷவிராசியும் வசியமாகும்.
பூசம் சப்தமி ரிஷபராசியும் ஆக்ருஷணமாகும்.
ஆயில்யம் துவாதசி மிதுனராசியும் மோகனமாகும்.
மகம் திரிதிகை கடகராசியும் ஸ்தம்பனமாகும்.
பூசம் அஷ்டமி சிங்கவிர்ர்சியும் வித்வேஷணமாகும்.
உத்திரம் திரயோதசி கன்னிராசியும் பேதனமாகும்.
அஸ்தம் சதுர்த்தி துலாராசியும் உச்சாடனமாகும்.
சுவாதி நவமி விருச்சிகராசியும் மாரணமாகும்.

சித்திரை சதுர்த்ஜி தனுசுராசியும் வசியமாகுங்.
விசாகம் பஞ்சமி தனுசுராசியும் ஆக்ருஷணமாகும்.
அனுஷம் தசமி கும்பராசியும் ஸ்தம்பனமாகும்.
மூலம் பிரதமை மேஷவிராசியும் வித்துவேஷணமாகும்.
பூராடம் சஷ்டி ரிஷபராசியும் பேதனமாகும்.
உத்திராடம் ஏகாதசி மிதுனராசியும் உச்சாடனமாறம்.
திருவோணம் துதிகை கடகவிராசியும் மாரணமாகும்.
அவிட்டம் சப்தமி சிங்கவிராசியும் வசியமாலம்
உத்திரட்டாதி துவாதசி கன்னியாவிராசியும் ஆக்ருஷண மாகும்.
சதயம் திரிதிகை துலாவிராசியும் மோகனமாகும்.
பூரட்டாதி அவிட்டம் விருச்சிகவிராசியும் ஸ்தம்பனமாகும்.
ரேவதி திரயோதசி தனுசுவிராசியும் வித்துவேஷணமாகும்

இந்த நாளில் திதி நட்சத்திரம் நாளுங் கண்டு எந்த வித்தையும் ஆரம்பஞ் செய்ய சித்தியும் ஜெயமுமாகும். அன்றியும், பட்சியையும் சரவியல் சாஸ்திரத்தையும் அறிந்து எந்த காரியத்தைச் செய்யினும் தடையில்லாமல் பலிதமாகும்.

---

## பஞ்சபட்சி

### தெய்வப்பட்சி

வல்லூறு-பிர்மா, ஆந்தை-விஷ்ணு, காகம்-ருத்திரன், கோழி-மயேஸ்வரன், மயில்-சதாசிவன்.

### கோணப்பட்சி

வல்லூறு - நீண்டவட்டம், ஆந்தை - ஐங்கோணம், காகம்-அறுகோணம், கோழி-நாற்கோணம், மயில்-முக்கோணம்.

## பூர்வபட்ச பூதப்பட்சி

வல்லூறு-தேயு, ஆந்தை-வாயு, காகம்-பூமி, கோழி-ஜலம், மயில்-ஆகாயம்.

## அமரபட்ச பூதப்பட்சி

வல்லூறு-பூமி, ஆந்தை-ஜலம், காகம்-தேயு, கோழி-வாயு, மயில்-ஆகாயம்.

## காலப்பட்சி

வல்லூறு-எதிர்காலம், ஆந்தை-சென்றகாலம், காகம்-எதிர்காலம், கோழி-நிகழ்காலம், மயில்-சென்றகாலம்.

## பூர்வபட்ச திசைப்பட்சி

வல்லூறு-கிழக்கு, ஆந்தை-தெற்கு, காகம்-மேற்கு, கோழி-வடக்கு, மயில்-மூலைகள்.

## அமரபட்ச திசைப்பட்சி

வல்லூறு-கிழக்கு, ஆந்தை-வடக்கு, காகம்-தெற்கு கோழி-மூலைகள், மயில்-மேற்கு.

## உரைக்கால திசைப்பட்சி

வல்லூறு-மூலைகள், ஆந்தை-தெற்கு, காகம்-கிழக்கு, கோழி-வடக்கு, மயில்-மேற்கு.

## தாது மூல ஜீவபட்சி

வல்லூறு-மூலம், ஆந்தை-சீவன், காகம்-தாது, கோழி-மூலம், சீவன், மயில்-தாது.

## ஆண்பட்சி பெண்பட்சி

வல்லூறு-ஆண், ஆந்தை-பெண், காகம்-ஆண், கோழி-பெண், மயில்-ஆண், அலி.

## பூர்வபட்ச ஜாதிப்பட்சி

வல்லூறு-பிராமணன், ஆந்தை-வைசியன், காகம்-க்ஷத்திரியன், கோழி-சூத்திரன், மயில்-நீச்சன்.

## அமரபட்ச ஜாதிப்பட்சி

வல்லூறு-பிராமணன், ஆந்தை-வைசியன், காகம்-க்ஷத்திரியன், கோழி-சூத்திரன், மயில்-நீச்சன்.

## பூர்வபட்ச நிறப்பட்சி

வல்லூறு-மஞ்சள், ஆந்தை-வெண்மை, காகம்-சிகப்பு, கோழி-பச்சை, மயில்-கருப்பு.

## அமரபட்ச நிறப்பட்சி

வல்லூறு-கருப்பு, ஆந்தை-சிகப்பு, காகம்-மஞ்சள், கோழி-வெண்மை, மயில்-பச்சை.

## அங்கபட்சி

வல்லூறு-முகம், கழுத்து, ஆந்தை-உதடு, மர்ம ஸ்தானம், காகம்-கண், மூக்கு, காது, கழுத்து, வெளுப்பு, கொழி-நெற்றி, தொண்டை,வலது கெண்டை, கை, மயில்-முதுகு, சொட்டை தலை.

## வயதுபட்சி

வல்லூறு-பெரியவன், ஆந்தை-இளையவன், காகம்-நீண்டவன், கோழி-குள்ளன், மயில்-இருவர்.

## அம்சப்பட்சி

வல்லூறு-சிறியவன், ஆந்தை-குமரன், காகம்-மத்தியன், கோழி-கிழவன், மயில்-மாரனன்.

## எழுத்துப்பட்சி

வல்லூறு-அ, பாலன், ஆந்தை-இ, குமரன், காகம்-உ, அரசன், கோழி-எ, கிழவன், மயில்-ஒ, சாவு.

## எண் பட்சி

வல்லூறு-ஒன்று, ஆந்தை-இரண்டு, காகம்-மூன்று, கோழி-நான்கு, மயில்-ஐந்து.

## உலோகப்பட்சி

வல்லூறு-பொன், ஆந்தை-வெள்ளி, காகம்-செம்பு, கோழி-வெங்கலம், மயில்-இரும்பு.

## ஆயுதப்பட்சி

வல்லூறு - வாள், ஆந்தை - வில்லு, காகம் - கத்தி, கோழி-கைகுத்து, மயில்-ஈட்டி.

## வஸ்திரப்பட்சி

வல்லூறு-நார்மடி, ஆந்தை-பட்டு, காகம் - சரிகை, கோழி–துணி, மயில்–கந்தை.

## விருட்ச பட்சி

வல்லூறு-மா, ஆந்தை - இலுப்பை, காகம் - புங்கன், கோழி-வேப்பன், மயில்· ஒதியன்;

## பூ காய் கனி பட்சி

வல்லூறு-தண்டு, ஆந்தை-கீரை, காகம்-கிழங்கு, கோழி-காய், மயில்-பூ.

## மாமிசப் பட்சி

வல்லூறு - மச்சம், ஆந்தை - கோழி, காகம்-ஆடு, கோழி-பன்றி, மயில்-பட்சி.

## புசிக்கும் பட்சி

வல்லூறு-பலகாரம், ஆந்தை-கூழ், காகம்-சாதம், கோழி-நொய்கஞ்சி, மயில்-பட்டினி.

## சுவைப் பட்சி

வல்லூறு-காரல், ஆந்தை-இனிப்பு, காகம்-துவர்ப்பு, கோழி-சிறுபுளிப்பு, மயில்-உவர்ப்பு.

## தொகை பட்சி

வல்லூறு-பத்து, ஆந்தை-நூறு, காகம்-இலட்சம், கோழி-ஆயிரம், மயில்-ஒன்று.

## நாணயப் பட்சி

வல்லூறு-அணு, ஆந்தை-பணம், காகம்-வராகன், கோழி-ரூபாய், மயில்-துட்டு.

## எடை பட்சி

வல்லூறு-வராகனெடை, ஆந்தை-பலம், காகம்-வீசை கோழி-சேர், மயில்-மணங்கு.

## நிறை பட்சி

வல்லூறு-கால்படி, ஆந்தை-அரைபடி, காகம்-ஒரு மரக்கால், கோழி-ஒருபடி, மயில்-முக்கால்படி.

## நிலப் பட்சி

வல்லூறு-பாலை, ஆந்தை-குறிஞ்சி, காகம்-மருதம், கோழி-முல்லை, மயில்-நெய்தல.

## இடப் பட்சி

வல்லூறு-சமமானபூமி, ஆந்தை-நாற்கால் கூடுமிடம் காகம்-ஜலமோடுங்கால், கோழி-மரத்தில், மயில்-பட்சிகள் கூடுமிடம்.

## பொதுமுட்டி பட்சி

வல்லூறு-கல், மண், ஆந்தை-புல், இலை, காகம்-சுட்ட கரி, கோழி-செங்கல், மயில்-கொம்பு, ஓடு.

## ஒளித்தல் பட்சி

வல்லூறு-வெளியில், ஆந்தை-காட்டில், காகம்-உள் வீட்டில், கோழி-அயல்வீட்டில், மயில்-காணூர்.

## மச்சப் பட்சி

வல்லூறு-முதுகு, ஆந்தை-உச்சி, கைக்கீழ், காகம்-புஜம், மார்பு, கோழி-முகம், கண்டம், மயில்-தொடை, முழங்கால்.

## போக்குப் பட்சி

வல்லூறு-பெண், ஆந்தை-பெண், காகம்-கள்ளன், கோழி-பூமியில், மயில்-பூமியில் வைத்தான்.

## அகப்படும் பட்சி

வல்லூறு-ஆணிடத்தில், ஆந்தை-பெண்ணிடத்தில், காகம்-ஒருவனிடத்தில், கோழி-ஆணிடத்தில், மயில்-பெண்ணிடத்தில்.

## மாய்க்கும் பட்சி

வல்லூறு-காகம்-ஆந்தை-வல்லூறு-காகம்-நான்குபட்சிக்கும் வலிது. கோழி-வல்லூறு-மயில்-ஆந்தை-கோழி

## முருக்குப் பட்சி

வல்லூலு-முக்கால், ஆந்தை-அரை, காகம்-ஒன்று, கோழி-கால், மயில்-அரைக்கால்.

## கொடுத்தல் பட்சி

வல்லூறு-கெடுவில், ஆந்தை-நாள்செல்லும், காகம்-கொடுப்பான், கோழி-ஏமாற்றுவான், மயில்-ஈயமாட்டான்.

## கெடுவு பட்சி

வல்லூறு-வாரம், ஆந்தை-பட்சம், காகம்-வருஷம், கோழி-மாதம், மயில்-நாள்.

## விஜயப் பட்சி

வல்லூறு-வருகிறான், ஆந்தை-தூரமாகில் வந்தான், காகம்-நிற்கிறான், கோழி மீண்டான், மயில்-அரைநாழிகையில் வருவான்.

## வரவுகால அளவுபட்சி

வல்லூறு-ஐந்துநாள், ஆந்தை-இரண்டுநாள், காகம்-மூன்றுநாள், கோழி-நாலுநாள், மயில்-ஒருநாள்.

## ஆள்வருத்தப்பக்ஷி

வல்லூறு-வருகிறான், ஆந்தை-மத்தியில் வருகிறான், காகம்-இடத்தில் நிற்கிறான், கோழி-இதோ வருகிறான், மயில்-அரைநாழியில் வருகிறான்.

## அவயவப்பக்ஷி

வல்லூறு-முகம், ஆந்தை-கண்டம், காகம்-மார்பு, கோழி-வயறு, மயில்-துடை.

## விரல்பக்ஷி

வல்லூறு-சிறுவிரல், ஆந்தை-பவுத்திர விரல், காகம்-நடுவிரல், கோழி-தொடுவிரல், மயில்-பெருவிரல்.

## அங்கஸ்தான தொடுகுறி பக்ஷி

வல்லூறு :—காலடி, பரடு கணைக்கால், இடுப்பு, உந்தி, கீழ்வயறு, கீழ்முதுகு, வயறு, வயற்றின் மார்பு, இரண்டு கை, பாளியங்கை, மூட்டுவிரல், கழுத்து, கூந்தற் கழுத்து.

ஆந்தை :—கணுக்கால், மேற்கெண்டை, கால் கெண்டை மூதுகு, மேல் மார்பு, மேல் வயறு, மேல் முதுகு, மேல் மார்பு, இரண்டு தோள், முன்கை, முழுவிரல், வாய்.

காகம் :—தாள், முழந்தாள், மேன்முதுகு, மேன்மூளை-பிடரி, முன்வயறு, முழங்கை, நெட்டவிரல், இரண்டு கண், செவி, மூக்கு,

கோழி '—தொடை, விலா, பின்வயறு, மோதிர விரல், நெற்றி, நாபி, கெண்டை கை.

———

குறிப்பு :—இதோடு சரவியலையும் அறிந்து எந்தக் காரியமும், தொடங்க வேண்டியது.

## சரவியல்

சரம் என்பது சுவாசம் நாம் விடப்படும் சுவாசம் நாள் ஒன்றுக்கு 21,600-பிராணுதாரமான சரத்தின் பேதங்கள், கதிகள், நிர்ணயங்கள், பலன்கள் முதலானவைகளை யறி விக்கும் நூல் சரநூலெனப்படும்.

சரமானது இடைகலை, பிங்கலை, சுழுமுனை என மூவகைப்படும். இவைகளல்லாமல் காந்தாரி, ஹஸ்தி, ஜிஹவ, பூஷலம், பூஷிதம், குக்கம், சங்கினி, சாரதை, என வேறு எழுவகையு முண்டு.

இடைகலை நாசியின் இடது துவாரம் வழியாகவும், பிங்கலை நாசியின் வலது துவாரம் வழியாகவும், சுழுமுனை இரண்டுக்கும் மத்தியாகிய பிர்மாந்திரத்திலும், காந்தாரி, ஹஸ்தி, ஜிஹ்வங்கள் காதுகளின் வழியாகவும், பூஷலமும் பூஷிதமும் கண்வழியாகவும், குக்கம் ஆசனத்திலும், சங் கினி மறைவிடங்களிலும், சாரதை வாயிலும் சஞ்சரிக்கும். இடகலைக்கு சந்திரகலை யென்றும், பிங்கலைக்கு சூரியகலை யென்றும் பெயர்கள் வழங்கும்.

நாசியின் வலதுபுற துவாரத்திலிருந்து வருகிற சுவா சத்திற்கு சூரியகலை, சூரிய நாடி எனவும், இடதுபுற துவா ரத்திலிருந்து வரும் சுவாசத்திற்கு சந்திரகலை, சந்திரநாடி எனவும் சொல்லப்படும். இதில் ஒவ்வொரு கலையும் ஐந்து நாழிகை நடக்கும். இரண்டரை நாழிகை கொண்டது கடிகாரமணி ஒன்று.

விவகாரம், வியாபாரம், சம்போகம், மங்கள ஸ்நானம், ஆகாரம், பீதி, அபஜயம், பாகை இவைகளில் சூரியநாடி சரம் நடந்துகொண்டிருப்பது நன்மை. இந்த விஷயங் களைக் குறித்துப் போகும்போது இடதுகாலை முதலில் வைத்து போகவேண்டியது.

யாத்திரை, தூரதேசப் பிரயாணம், கல்யாணம், ஆபர ணம் தரித்தல், பூமிவுழுதல், மனைகட்டுதல், தோப்பு வைத் தல் இந்த காலங்களில் சந்திரநாடி சரம்நடப்பது உத்தமம்,

இந்த விஷயங்களுக்குப் போகும்போது இடதுகாலை முதலில் வைத்துப் போகவேண்டியது.

சூரியகலை யோடுங்காலத்தில், ஸ்திரீ சம்போகம், வித்தியாப்பியாசம், சாஸ்திராப்பியாசம், வாகனமேறுதல், சித்திரப்படம் எழுதுதல், மந்திர சாதனம், யந்திர நிர்மாணம், வியவகாரம், ஸ்நானம், போஜனம், பிரசங்கம், தானம், தருமம், மாரணம், உச்சாடனம், மோகனம், ஸ்தம்பனம், வேட்டை, கால்நடைகளின் விக்கிரயம், வஸ்திரம், தானிய விக்கிரயம், வடக்கு பிரயாணம் நடத்தவேண்டும். இதனால் ஆரோக்கியம், சுகம், ஆயுள், ஆயுள்விருத்தி, இலாபம், இவைகள் உண்டாகும்.

சந்திரகலை யோடுங்காலத்தில் சூது, தெற்கு மேற்கு பிரயாணம், யுத்தம், சாந்தி, கழித்தல், உபாயனம், அர்த்த சங்கிரகம், கிரகப்பிரவேசம், அரசதரிசனம், விதைத்தல், ஔஷதசேவை, சத்புருஷ கோஷ்டி யோகாப்பியாசம், விவாகம், தேவைப்பிரஷ்டை, தூரதேசம் போதல், கோடியுடுத்தல், அலங்காரம், சுரதோஷ சிகிச்சை, நீராடல் இவைகளால் சுபமுண்டு.

சுழுமுனை யோடுங்காலத்தில் பிராணயாம வாசியென்னும் கும்பகம் (மூர்ச்சை உள்ளே அடக்கம்) செய்தல் சிரேஷ்டம்.

சரம் பார்ப்பவர்களுக்கு ஆசனமாவது :—மூங்கில் தடுக்கு தரித்திரம், கல் வியாதி, தரை மணல், துக்கம், உடைந்த அல்லது அறுபட்ட பலகைகள் நன்மையில்லை கோரை முதலிய புற்பாய்கள் கீர்த்தி நாசம், பச்சிலை தழைகள் மனநடுக்கம், மான்தோல் ஞானம், புலித்தோல் செல்வம் உண்டாகும்.

திங்கள்-புதன்-வெள்ளி-பகலிரவு

| | | |
|---|---|---|
| 6 மணி முதல் | 8 மணி வரையில் | சந்திரன் |
| 8 ,, | 10 ,, | சூரியன் |
| 10 ,, | 12 ,, | சந்திரன் |

| | | |
|---|---|---|
| 12 மணி முதல் | 2 மணி வரையில் | சூரியன் |
| 2 ,, | 4 ,, | சந்திரன் |
| 4 ,, | 6 ,, | சூரியன் |
| 6 ,, | 8 ,, | சந்திரன் |

### ஞாயிறு-செவ்வாய்-சனி

| | | |
|---|---|---|
| 6 மணி முதல் | 8 மணி வரையில் | சூரியன் |
| 8 ,, | 10 ,, | சந்திரன் |
| 10 ,, | 12 ,, | சூரியன் |
| 12 ,, | 2 ,, | சந்திரன் |
| 2 ,, | 4 ,, | சூரியன் |
| 4 ,, | 6 ,, | சந்திரன் |

வளர்பிறை வியாழம் காலை சந்திர கலையில் சந்திரன்
தேய்பிறை வியாழம் காலை சூரிய கலையில் சூரியன்.

### கலி விருத்தம்

வெள்ளிவெண்டிங்கள் விளங்குபுதனிடம்
தெள்ளியஞாயறு செவ்வாய்சனிவலம்
வள்ளல்வியாழம் வளர்பிறைக்கோரிடம்
விள்ளுநற்றேய்பிறைக் கேவலமாகுமே.

## வரப்பிரசாத வசியத் திரட்டு

### காளி வசியம்

காளியென்று லுலகமெல்லாங் கதறிநிற்கும்
காலமறிந் தருமைத்தாய் வசியஞ் சொல்வேன்
வாளிதொடு ஓம் சிவசிவா வென்ற சத்தி
வர்ணிக்க தேவியே காளிசத்தி
நாளறிந்து நலமறிந்து என்முன்னின்று
நானவிலும் பகைவரெலா நசித்துப்போக
கோளரியே நீசெய்வாய் தல்லிதல்லி
குணந்தந்து குறையொழிப்பாய் கும்பிட்டேனே.

என்ற இப்பாடலை, குளித்து வெண்வஸ்திரந் தரித்து விபூதி யணிந்து அதற்குமேல் குங்கும மணிந்து புழுங்கலரிசிச்சோறு பொங்கி, முட்டைக் கோழியும் முட்டையும்

சமைத்து, பால், பழம், தேங்காய், பாக்கு, வெற்றிலை, சாம் பிராணி தூபம், புஷ்பம், வாழைப்பழம், இளநீர், சர்க்கரை, எலுமிச்சம்பழம் இவைகளை யெல்லாம் வாழையிலை மேல் பரப்பி 1008-தரம் சொல்லவும். காளிகாதேவி பிரசன்ன மாவாள். அப்போது நீ கொஞ்சமேனும் பயப்படாமல் அம்மணி! உலகமாதா! இன்றுமுதல் நீ என்றென்றைக்கும் என்னுடனிருந்து என் பகைவரை வென்று சுத்த வீரனாக வும் குபேரனைப் போலவும், நான் நினைத்த சுப காரியமெல் லாம் சித்தியடையச் செய்துக்கொண்டிருப்பாயாகவென்று அம்மன் திருவடிகளில் பணிந்தாயானால் வரந்தருவாள்.

## குறளி வசியம்

அரி அரிபகவான் ஆனந்தபகவான்
அர அரசிவசிவ அம்பிகை துணையே
ஓம் நமோ பகவதே உத்தண்டபகவதே
உருதேரிய குழந்தைவாவா
உபசரணைபண்ணும் உகப்பான் தாயேவாவா
ஒருகையில்பந்தும் ஒருகையில்செம்பு
ஒருகையில்சூலமும் இப்படிபலபல
காரணகாட்சிகள் காட்டும்கண்கட்டும்
களரிவிளையாடும் காரணக்குறளிவாவா
குறளிவாவா நான்நினைத்தபுஷ்பம்
பொன்காசு பூதலம்மெய்க்கப் புதுமைகள்காட்ட
தன்கையாலெடுத்து என்கையில்தருவாய்
தங்கக்காசு உன்னுடைய சிங்காரம்
சிறுவேல்விழியும் மாகணவிரிப்பும்
அதுமேல்விரிப்பும் பொற்காவடியும்
பூமாலைசூடும் ஆகாசசிங்காதனத்திலிருந்து
வாவாதாயே வரந்தருந்தாயே
வந்துஎன்னின்று என்சொல்லைக்கேட்டு
என்வசமாக நிற்கசுவாமி.

இந்த விதமாக (108 தரம் உரு கொடுக்கவும். புழுங்க லரிசிச் சோறாக்கி கோழிக்கறி சமைத்து சாரயம், புஷ்பம், இளநீர், கச்சைக்கருவாடு, பழம், பாணக்கம் இதுகள்

வைத்து சாம்பிராணி பூசைபோடவும் நவரத்தினம், பொன், பழ முதலிய தின்பண்டங்கள் கொண்டுவந்து அட்டியில்லாமல் கொடுக்கும்.

## எட்சணி வசியம்

ஓங்கார எட்சணி உச்சாடன எட்சணி

உருவான எட்சணி நான் நினைத்திருக்கும் தின்பண்டங்கள் அனைத்தையும் உடனே கொண்டுவா சுவாஹா என்று மல்லிகை சந்தனம் எலுமிச்சம்பழம் வைத்து சூடமேற்றி (108) தரம் உருஜெபிக்க காட்டிலுள்ள எல்லாப் பழவர்க்கங்களையும் தடையின்றி கொண்டுவந்து தருவதுடன் உன்வாக்கில் குடியாக விருந்து உன்னைப் பெருமையாக நினைப்போருக்கு இறந்தகால நிகழ்கால எதிர்கால சுக துக்கங்களை யொளிக்காமல் நாலுபேரறிய பளிச்சு பளிச்சென்று கூறும் அப்போது உன்னைப் பலரும் குறி சொல்வதில் வெகு சாமர்த்தியனென்று பலவித வெகுமானங்கள் கொடுப்பார்கள்.

## மோகினி வசியம்

ஓம் அம் சவ்வுங்கிலியும் நமசிவாயா

மோகிமோகி காமிகாமி நீயிட்ட திருநீறு நானெடுத்து செல்வேனாகில் என்சத்துரு வலிவு குன்றி அவன் ஜபம் சாயக்காலில்லமற் போகக் கடவது ; சர்வ மோகினி ஆம் ஓம் சத்தி சத்தி நமசிவாயா என்று மல்லிகைப்பூ பரிமள திரவியம் வாழைப்பழம், இளநீர், தென்னை இலையில் படைத்து சாம்பிராணி தூபங்கொடுத்து (108) தரம் உரு கொடுத்தால் ஒரு அழகிய பெண் சொரூபத்துடன் வரும். அப்பெண்ணைக் கண்டு மோகிக்காமலும் பயப்படாமலும் மனவுறுதியாயிருந்தால் மல்லிகைப்பூ, மூன்றெடுத்து உன் முன்போட்டுவிட்டுப் போய்விடும். அதை யெடுத்து பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு, நீ யாரை வசப்படுத்த வேண்டுமோ அவர்கள் பெயரை ஒரு சீட்டில் எழுதி நசி நசி வாவா என்று துதிக்க நினைத்தோர் வசமாவார்கள்.

இரண்டாம் பாகம் முற்றிற்று.

*திருமகள் அச்சகம், சென்னை—1. 1973.*

உ

பராசத்தி துணை

உயிர் மெய் எழுத்து

# மூலிகை ஜாலரத்தினம்

## மூலமும் - உரையும்

[இரண்டு பாகங்கள் அடங்கியது]

இ ஃ து

பீதாம்பர ஐயர் மரபில் வந்த
ஜாலரத்தின சிரோமணி அவர்களிட மிருந்து
பண்டைய ஏட்டுப் பிரதியைக்கொண்டு,
கொரக்கோட்டை
ப. வடிவேலு செட்டியார் அவர்களால்
எழுதியது.

பதிப்பாளர் :

**B. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ்,**

சென்னை — 1.



[ரூ. 1—25